லும், உத்தரணங்களில் *ப்ராமாதிகத்திலும் புத்திபூர்வோத்தரணத்தில் ப்ராயச்சித்தாதிமுகத்தாலே ஸம்நிவ்ருத்திகளும் ப்ரமாணாநுகுணமாகச் சொன்ன கட்டளையிலே கண்டு கொள்வது. 95.

இப்படி ஸகலபாபத்திற்கு ஸம்க்லேசமில்லாதபடி கொள்ளில், ப்ராரப்தகர்மமும் நிஶ்ஶேஷமாகக் கழிந்து ப்ரபந்நரெல்லாரும் அந்த க்ஷணத்திலே முக்தராக வேண்டாவோ என்னில், இங்கு 'ஸர்வ பாபே:' என்கிற வாக்யஸாமர்த்யத்தாலே ஶோகவிஷயமானவை யெல்லாம் கழிகையிலே †தாத்பர்யமாகையாலே, தீவ்ரஸம்வேகம் இல்லாதார்க்கு [1]"ப்ராரப்தேதரபாபௌகம் தக்த்வா ஸர்வம் ஸநாதந:" இத்யாதிகளிற்படியே ‡ப்ராரப்தஶரீராதிகள் நிற்கக் குறையில்லை. 96.

இப்படி ப்ரபந்நனுக்கு ப்ராரப்தகர்மம் கழியாதாகில், உபாஸகனுக்குப் போலே §இவனுக்கும் ப்ராரப்தகர்மாவஸாநத்திலே மோக்ஷமாகவேண்டாவோ என்னில், $இதற்கும் "ஸர்வ பாபே:" என்கிற இத்தாலே பரிஹாரம்; எங்ஙனேயென்னில், இவனுக்கு கர்ப்பவாஸாதிகளில் ¶உத்வேகஸம்பவத்தாலே ப்ராரப்தத்தில் ஜந்மாந்தராதிஹேதுவான அம்சம் கழியும்; இஶ்ஶரீ

1 *ப்ராமாதிகத்தாலும் நேராகிற்கும் புத்திபூர்வோத்தராகத்தில் ப்ரமாணாநுகுணமாக ப்ராயச்சித்தாதிமுகத்தாலே-க. †தாத்பர்யம். ஆகையாலே—க. ‡ப்ராரப்தசரீராதிகளுக்கிடாகக் குறையில்லை-க. சரீராதிகள் கிடக்க—வ. §இவனுக்கும்—க. $இங்கு ஸர்வ பாபே: என்கிறத்தாலே பரிஹாரம். இவனுக்கு கர்ப்பவாஸாதிகளில்—க. ¶உத்வேகாதிஶயத்தாலே—வ.

ரம் தன்னிலும், இவனுடைய உத்ஸாஹத்தளவுக்கீடாக ||கார்யவைஷம்யமும் ஸஹிக்கும். 97.

இப்படி ப்ரபத்திவஶீக்ருதனான ஈஶ்வரன் அநிஷ்டமெல்லாம் கழிக்கிறானாகில், ப்ராரப்தஶரீரத்தில் து:க்கஹேதுவான பாபாம்ஶம் கழியவேண்டாவோ என்னில், இவன் அவ்வம்சத்தையும் பற்ற உதாஸீநனாய் ப்ரபத்தி பண்ணுமையாலும், அவ்வளவில் இவன் ஸம்ஸாரதோஷம் மறவாமைக்காகவும், ஶிக்ஷார்த்தமாகவும், ப்ராரப்தத்தில் பாபாம்ஶஸாத்யமான க்லேஶங்களை ஹிதபரனான ஈஶ்வரன் அநுபவிப்பிக்கிறான். [1]"ஹரிர்து:க்கானி பக்தேப்யோ ஹிதபுத்த்யா கரோதி ஹி । ஶஸ்த்ரக்ஷாராக்நிகர்மாணி ஸ்வபுத்ராய யதா பிதா ॥" இத்யாதிகளுக்கும் இஶ்ஶரீரத்தில் ப்ராரப்த பாபஸாத்யமான து:க்கங்களிலே தாத்பர்யம். 98.

இப்படியானாலும் *இஶ்ஶரீராநுபந்தியான க்லேஶமுமெல்லாம் ஶமிக்கவேண்டும் என்று ப்ரபத்தி பண்ணினவனுக்கு முக்தருக்குப்போலே ஸர்வக்லேஶ நிவ்ருத்தி உண்டாகவேண்டாவோ என்னில், †இங்ஙன் ப்ரபத்திபண்ணுகை கூடாது: சரீரம் இருக்கவேண்டும் என்று நினைக்கிறபோதே ஶரீராநுபந்தியான து:க்கங்களுக்கு ஹேதுவான ஊணும் உறக்கமும் ஶத்ருஜயாதிகளும் இஷ்டங்களாகையாலே, [2]"க்ஷுத்பி: பீட்யதே யஸ்ய த்ருஷா ஹந்யஸ்ய ச க்ஷுதா । க்ரியதே ஸுகக்ருத்வம் தத்ரோபாஸ்ய தேவதை:" இத்யாதிகளிற்படியே க்ஷுத்ப்ரதீகாராதிகளையொழிய இவ்

---

1 [2]வி. பு. 1. 17. 64. ||காலவ்யவஸ்தை—க.

*இச்சரீராநுபந்தியுமான—க. †இங்கிவன்—க.

ஸாதநங்கள் ஸுபியாமையாலே, சரீரத்தோடே இருக்க இசைந்த காலம் ஸவஸ்ஷோபவநிவ்ருத்தியைக் கணிசிக்கக் கூடாது. விசேஷித்து வ்யாஸாதிகேஸங்களைப் பற்ற ஸஷ்ட கதம்ர-ஸாயந-வெகணஃமற ப்ரபத்திபண்ணி ஞல், அவை ஸமிக்கக் காணுநின்ரேம். 99.

ப்ரபந்நனைப் பற்ற 'ஶ ஸாவஃ' என்று சொன்ஞல், இவன் ஏதேனும் ஒன்றைப் பற்ற ஶோகிக்கில் தன் நிஷ்டைக்கு விரோதமாகாதோ? வ்யாஸவஸிஷ்டாதிகளான மஹாயோகிகளும் கூட ஓரளவிலே ஶோகிக்கக் காணு நிற்க, சரீரத்தோடிருப்பாரொருவனுக்கு ஸர்வஶோகங் களையும் விட்டிருக்கை துஷ்கரமன்ரே என்னில், இவ்விடத்தில் அஜ்ஞாநஸக்த்யாதிகளையிருக்கிற தனக்கு உபாயாந்தரங்களில் அநவஸ்தையாலே பிறந்த ஶோ கத்தையும் கோலின ஸஸத்தையும் பற்ற கதவ்யஶ ஷம் உண்டோ என்று இப்புடைகளில் உள்ள ஶோ கங்களையும் கழிக்கிறதாகையாலே, லௌகிகஶோகங்க ளுக்கும் ஸமவிஷயவிஷாதிகளால் வரும் ஶோ கங்களுக்கும் ப்ரபத்திநிஷ்டையோடுவிரோதமில்லை. 100.

இதி ஶ்ரீகீதாஶோகே விஶேஷாஃவஶேஷஃஷாம் ।
ஸஜாதஸவரிஹாராணாம் ஸாரணிஸஙீக்ஷாஹ்ருதா ॥

---

இதி விரோதபரிஹாரே
ஸாரஸ்ரோகாதிகாரஃ த்ருதீயஃ ॥

---

திருமந்த்ரமும் த்வயமும் மந்த்ரங்களானபடியாலே அநுஷ்டாநமாக உபதேசிக்கவேண்டுகையாலே இவற்றை ரஹஸ்யங்கள் என்னப் ப்ராப்தம்; [1]"ச்ராவயேச் சதுரோ வர்ணாந் க்ருத்வா ப்ராஹ்மணமக்ரத:" என்று திரளிலே கேட்பிக்கலான இதிஹாஸத்திலே *ஏற்பட்டுக் கிடக்கிற சரமச்லோகத்தைக் கூட்டி 'ரஹஸ்யத்ரயம்' என்று உபதேசிக்கைக்கு அடியென்னென்னில், திருமந்த்ரமும் த்வயமும் ஸ்வரூபத்தாலே இரண்டாலும் ரஹஸ்யங்களாயிருக்கும்; சரமச்லோகம் ஸ்வரூபம் ப்ரகாசமாய்ச் சொல்லலாலும், அதிரஹஸ்யமான அர்த்தவிசேஷத்தாலே ரஹஸ்யமாயிருக்கும். ஆகையால் இவை மூன்றும் முமுக்ஷுக்களுக்குப் ப்ரயோஜநாவஜீவநங்களான ரஹஸ்யங்களாகையால், 'ரஹஸ்யத்ரயம்' என்று ஆதரிக்கப்படுகிறது. 101.

இப்படி இவை மூன்றும் ஆதரணீயங்களாக வேண்டுமோ? சரமச்லோகத்தில் உபாயவிசேஷத்தை விளங்கக் கண்டு, த்வயத்தைக் கொண்டு அநுஷ்டித்து க்ருதக்ருத்யனாய் விடலாயிருக்க, முமுக்ஷுவாய் ப்ரபத்தி பண்ணுகிற அதிகாரிக்கு திருமந்த்ரத்தாலே ப்ரயோஜநமென்னென்னில், இவ்வதிகாரிக்கு அநந்யார்ஹசேஷத்வாதி தத்வஜ்ஞாநங்கள் தெளியவேண்டுகையால் அதற்காக யதாதிகாரம் வைதிகதாந்த்ரிகக் கட்டளையிலே திருமந்த்ராத்யயநாநுஸந்தாநம் உபஜீவ்யமாகையால், திருமந்த்ரம் அவச்யாபேக்ஷிதம். 102.

---

1     *ஏற்றப்பட்டு—க. ஓதப்பட்டு—வ.

இப்படியாகில் திருமந்த்ரம் தன்னாலே ஆத்ம ஸமர்ப்பணமும் ஸாங்கமாயிருக்கையால், த்வயத்தால் அபேக்ஷையென்னென்னில், திருமந்த்ரத்தால் ஆத்மஸமர்ப்பணம் ஸக்ருதேயாகிலும், விஶதாநுஸந்தாநம் ஸக்ருதன்று; ஆகையால் பாரமர்ஷிகாரநித்ய யோகாதிகளையும், விஶிஷ்டமான ஸித்தோபாயத்தையும். விஶிஷ்டமான ப்ராப்யத்தையும், ப்ராப்யனான ஈஶ்வரன் தானே ப்ராபகனாய் நிற்கிற நிலையையும், ஸபரிகரமான வஶீகரண விஶேஷத்தையும், தெளிய ப்ரகாஶிப்பிக்கிற த்வயம் ஸ்வரக்ஷாபரஸமர்ப்பண தஶையில் அநுஷ்டாநஸௌகர்யத்தால் அவஶ்யாபேக்ஷ்யம். 103.

இப்படியானாலும் திருமந்த்ரத்தாலே ஶேஷத்வபாரதந்த்ர்யாதிகளை அநுஸந்தித்து, மற்றும் அபேக்ஷிதங்களையும் த்வயத்தாலே தெளிந்து, பாரமர்ஷிகாரபார ஸமர்ப்பணவிஶிஷ்டப்ரபத்தி பண்ணி, நிர்ப்பரனாய் வேறொன்றால் அபேக்ஷையற்று, [2]"அபயப்ரதாந ஸாரஜ்ஞேந ஸஹ ஸதைவ வஸதா" என்கிறபடி இதுவே காலக்ஷேபமாயிருக்கிற அதிகாரிக்கு சரமஶ்லோகத்தாலே அபேக்ஷையென்னென்னில், அகிஞ்சநனாய் ஸ்வரக்ஷாபரஸமர்ப்பணம் பண்ணுகிறவனுடைய அதிகாரவிஶேஷமும், இவ்வதிகாரிக்கு ஸாத்யோபாயஸ்தாநத்திலே ஸித்தோபாயம் நிற்கிற *நிலையும், அதினுடைய நைரபேக்ஷ்யமும் துணையுடைமையும், ஶரண்யஸௌலப்யமும், ஶரண்யஸர்வஜ்ஞத்வத்தாலே ஸர்வாநிஷ்டநிவ்ருத்தியானமையும், இவ்வுபாயம் ப்ராப்யத்தையும் கழிக்கவற்றானபடியும், இவனுக்குக் கோலின ஶோகத்தைப்

[1] சரண. கத். *நிலையையும்—க.

பற்றத் தான் நிர்ப்பரனாய் நிரதிஶயப்ரீதியோடே இருக்கலான நிலையும், எல்லாம் சரமஶ்லோகத்தில் விஶதமாக அநுஸந்திக்கலாமாகையாலே, ஸாதநாநுஷ்டாநத்திற்கு முன்பே ஸாதநவிஷயகமான இச்சரமஶ்லோகம் அவஶ்யாநுஸந்தேயம். 104.

இப்படியாகில், *'ஜிதந்தே', ஶ்லோகத்வயம் முதலானவற்றையுமெல்லாம் ரஹஸ்யங்களாகச் சேர்த்து அநுஸந்திக்கத் தட்டென்னென்னில், விஸ்தராபேக்ஷை உள்ளபோது அவையும் உபஜீவ்யங்களாகிலும், அவற்றிலுள்ளவையெல்லாம் இவற்றில் உண்டாகையாலும், ஶ்ருதிஸ்ம்ருதிஸம்ப்ரதிபத்தியாலும், இவை மூன்றையும் ப்ரதானங்களாக பூர்வர்கள் அநுஸந்தித்தார்கள். ஆகையால் இவை மூன்றும் ஸர்வவிஷய ஶப்தராஶியில் †ஸாரதமம் என்னும் அர்த்தத்தை ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாரநிஷ்கர்ஷாதிகாரத்திலே ஸமர்த்தித்தோம். 105.

ஒரு முமுக்ஷுவுக்கு இப்படி ரஹஸ்யத்ரயஶிக்ஷை வேண்டுமாகில் [1]"சிந்தயந்தீ ஜகத்ஸூதிம் பரப்ரஹ்மஸ்வரூபிணம் । நிருச்ச்வாஸதயா முக்திம் கதாந்யா கோபகந்யகா" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே எட்டும் இரண்டும் அறியாத இடைச்சிகள் மோக்ஷம் பெற்றபடி எங்ஙனேயென்னில், அவர்களும் பூர்வஜன்மங்களிலே அபேக்ஷிதஶிக்ஷை பண்ணி, ஒரு உபாயவிஶேஷத்திலே துவக்குண்டு, ப்ராரப்தகர்மவிஶேஷங்களாலே சில ஜன்மங்களுண்டாய், அந்திமஶரீரத்தில்

[1]வி. பு. 5. *ஜிதந்தையில் ச்லோகத்வயம்—க.

†ஸாரதமங்களாக ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரத்திலே—க.

ஒருபரீக்ஷை இல்லையேயாகிலும், பஹுவிதவாஸநாதிகள் உபகரித்து ஸமாஸ்ரயணமுண்டாய் பரமஸாம்யம் பெறுகிறார்களாகையாலே ஏதேனுமொரு ஜன்மத்திலே ஸாபேக்ஷிதஸம்பந்த ஜ்ஞாநத்தாலே எல்லாரும் ஈடேறுவார்கள் என்னுமிடம் ஸித்தம். 106.

இப்படி ஜ்ஞாநாநுஷ்டாநஸம்ஸ்காராதிகள் உபகரிக்க அநுகூலஸ்வபாவராய்ப்பிறந்து முக்தராகப் ப்ராப்தராலும் ஜ்ஞாநங்களிலும் ப்ரதிகூலராய், ஸஞ்சாரத்திலும் தான் படுமளவும் எதிரம்புகோத்து நின்ற ஶிஶுபாலனுக்கு [1]"ப்ரதிஸம்பந்தாநுபந்தி ஸாயுஜ்யதோ ஸந்:" என்கிறபடியே மோக்ஷம் கொடுத்தபடியென்னென்னில், அடியிலே ஸ்ரீவிஷ்ணுலோகத்திலே பார்ஷதத்வம் பெற்றார் இரண்டு க்ஷேத்ரஜ்ஞர் ஸநகாதிகளின் பராபவாதவிசேஷத்தாலே மூன்று ஜன்மம் ப்ரதிகூலராய்ப் பிறந்து, அவ்வவதார ஸமாப்தியிலே பழைய பதம் பெற்று கைங்கர்யபரராய் நின்றார்கள் என்று புராணஸித்தமாகையாலே இப்படிப்பட்ட விஷயங்களிலும் முன்புற்றை ஸம்பந்தாபேக்ஷையடியாக மோக்ஷம் என்னுமிடம் ஸித்தம். 107.

இப்படி *ரஹஸ்யத்ரயவிஷயமாக வரும் சங்கைகளுக்குப் பரிஹாரங்கள் உதாஹரித்தாலும், ந்யாயாபாஸாதி ஸித்தாந்தங்களாலே மயங்கின தர்க்கிகளுடைய உதிதாத்தத்தாலே வரும் சங்கைகளுக்கு எல்லையுண்டோ? அவை எல்லாம் பரிஹரித்து ஒருவனுக்கு விஸ்வாஸஜ்ஞாநம் தேடக் கடைப்படுமோ என்னில், ஸம்க்ஷேபகாரத்தாலே

---

[1] ஸ்தோ. ர. 63. †முக்தராக ப்ராப்தமானால்—க. முக்தராக ப்ராப்தம். ஜந்மாந்தரங்களில்—வ. *ரஹஸ்யவிஷயமாக—க.

வ்யாக்யாநாம்ஶம் தெளிந்தால், இச்சிக்காலே மற்றுமுள்ள சங்கைகளுக்கெல்லாம் பரிஹாரங்கள் பல ஶாஸ்த்ரங்களிலும் ஸ்ரீபாஷ்யாதிகளிலும் †வ்யுத்பந்நராய், [1]“திருந்தக் கண்டு எனக்கொன்று உரையாய்” என்னும்படி நிற்கிற தெளிவுடைய விஶேஷஜ்ஞரோடே ஸேவித்துத் ||தெளியக் கண்டு கொள்ளலாம். 108.

வ்யாக்யாநமல்லாத அம்சத்தில் தெளிவு இல்லாத போதும் வ்யாக்யாநாம்ஶம் தெளிகையாலே ஸந்துஷ்டி உண்டாம். 109.

அலர்ந்தவம்புயத்திருந்து தேனருந்தி யின்னகல்
அல்குலாரசைந்தடைந்த நடைகொளாததனமென்றோ
நலந்தவிர்ந்ததாலதென்கொல் நாவின்வீறிழந்ததால்
நாவணங்குநாதர்தந்த நாவின் *வீறிழந்ததென்
சலந்தவிர்ந்துவாதுசெய்து சாடிமூண்டமிண்டரைச்
சருவிலாரெனக்கனைந்துரைத்த ¶வேதிராசர்தம்
வலந்தரும்கைநாயனார் வளைக்கிசைந்த கீர்த்தியால்
‡வாரிவாலதாமதென்று மாசில்வாழிவாழியே. 33.

ஸ்ரீமத்வேங்கடநாயகேந மஹதா
ஶேஷாத்ரிவாஸம் ஸதாம்
ஶேஷாஶீவிஷதுங்கஶைலஸ்வாமிந:
ஸந்நாயகஶ்ரீயா ।

---

[1]6. 1. 8. †ப்ராப்தஜ்ஞராய்—வ ||தெரிய—க
*வீறழிந்ததென்—வ. ¶எதிராசர்தம்—வ. ‡வாரிபாலதாம்-க.

அப்யாரோபித தத்த்வமுக்திகலஹே
  ஸ்யாத்த்வய்யாத்மநாம்
பக்தாநாம் பரிஹாரபக்திரபியம்
  க்ஷிப்த்வா த்ருதோ மஹிதா ||

ஸ்தோத்ரம் ஸ்ரீஸ்தவஸூக்தி-
  மயமா தோஷாஞ்சம் ஸமக்ரம் ஜகத்
கிம் ஸ்ரீரங்கஸ்ய ஸூக்தி ஸ்ரீநாதயோ
  ஸாக்ஷாத் ஸர்வம் த்வத்ஸ்வரூபம் |
பரிஷ்காரஸ்பர்சிதபாஷ்ய:
  ஸ்ரீதிவ்யே யேஷாம் வயம் யே ச ந:
தத்ஸங்கோஷமஹவைபுண்யசக்ஷுஷம்
  ஸாக்ஷம்பவேர: கிம் பரை: ||

$சடையன் திறலவர் கள்பெரு
  ஞானக் கடலதனை
இடையமிழ் மூழ்துகடக்கினும்
  ஈதள வென்றறியார்
விடையுட னேழன் றடர்த்தவன்
  மெய்யருள் பெற்றநல்லோர்
அடைய அறிந்துரைக்க
  அடியோமுமறிந்தனமே. 34.

இதி ஸ்ரீரங்கநாயிகாஸ்தவ: ஸமாப்த: ||

---

$இந்தப் பாசுரம் முந்தின இரண்டு ச்லோகங்களுக்கும் முன்னால் 33-வது பாசுரத்திற்குப் பிறகு அச்சிடப்பட்டிருக்கிறது—க.

𑌇𑌤𑌿 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌸𑌿𑌂𑌹𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯

𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑌿𑌷𑍁

𑌵𑌿𑌰𑍋𑌧𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑌃 𑌸𑌮𑍍𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 ॥

---

ஸ்ரீ: ॥

# ஸ்ரீநிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்த ரஹஸ்யங்களில் 28-வது ரஹஸ்யமான முநிவாஹநபோகம்.

*வ்யாவிவ்யாஸக்தி ஸக்த்யா விரக்த-
தோஷாய வேங்கடேஶகவி: |
†முதிதமுக்தவிஶோகந-
முநிவாஹநபோகவிபக்திஶாடி ॥

$பாவளரும் தமிழ்மறையின் பயனே கொண்ட
பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தில்
காவலனும் கணவனுமாய்க் கலந்து நின்ற
காரணனைக் ‡கருத்துறநாம் கண்ட பின்பு
கோவலனும் கோமானும் ஆன வந்நாள்
குரவைபுணர் கோவியர்தம் குறிப்பே கொண்டு
சேவலுடன் பிரியாத பெடைபோல் சேர்ந்து [மே.35.
தீவினையோர் தனிமையெல்லாம் தீர்ந்தோம் நா

காரணவிசேஷம் இன்னது என்று அறுதியிட அரிதாயிருப்பதொரு ஸமவஸ்கடாக்ஷத்தாலே ஸ்வயந்த்ருஷ்டமான பரதத்வ - பரஹித - பரவைராக்யாதி விவேகத்தை உடையராய், ஸநாதிகாரஶ்ரவ்யத்தங்களான

---

*ஶ்ருணுதிம் வேங்கடேஶஸ்ய வசோயோவிபுதஸ்ஸஹி। யஸ்மாத் யோ யதீந்த்ராக்ரஹஸ்யாநாம் ரஸாயநம் ॥ என்று அதிகமாக ஒருசுலோகம்—வ. [ஶாடி ॥ —க.

†முக்தவிஶோகநமுதிதமுநிவாஹநபோகவைஜ்ஞக்திஶி

$இந்தப் பாசுரம் 37வதாகவும், அது 35வதாகவும் மாறியிருக்கிறது—வ. ‡கருத்துற நான்—க.

க்ஷாஊர்வாதாஷாயபுராதாதிகளையும், க்ஷாஊர்வாதாஷெஷாத்ராதிகளையும், க்ஷாஊர்வாதாஷாயபூர்வவ்ருத்திகளையும் தப்பின தம்முடைய காரணத்ரயமும் இப்போது ஹ்ராவ்யமான வாகவிஷயத்திலே ஸநந்யஹ்யொஜநாந கஹவ்ருத்தியை யுடைத்தானபடியைக் கண்டு ஸஞெஷாஷயாகரான திருப்பாணாழ்வார் பின்பு பரமபதத்திலே பெறும் பேற்றை இங்கே பெரியபெருமாள் $திருவடிகளிலேபெற்று, இப்பேற்றை அடிதொடங்கி, 'அமலன் ஆதி பிரான்' முதலான பத்துப் பாட்டாலே ஸநாஹவவாீவாஹமாக அருளிச் செய்கிறார்.

இப்ஹ்ரபாஸம் ஸதிவிஸ்தாரம், ஸதிஸஜொவம், *ஸயிக்ருதாயிகாரகவும், ஊரஹ்ருபுஹகவும், ஊராவ வொயாயபுகவும், ஸம்ஶயாதிஜநகஸவும், †விரஹக்ளெஶம், உதவைஹ்ருஷணம், வரொவஷெஶம், வாஉதநிரவஸநம் என்றாற்போலே மற்றுள்ள ஸயூாதஹ்ரபாஸங்களில் உள்ளவையொன்றுமின்றிக்கே ‡ஸநாஹவவஸநாஸமாயிருக்கிறது முதற்பாட்டான 'அமலனாதி பிரான்' தொடங்கி, 'கொண்டல்வண்ணனை' என்கிற ||தலைக் கட்டும் பாட்டளவும்.

இதில் முதற்பட்ட மூன்றுபாட்டுக்கு முதலான §அக்ஷரங்கள் மூலமாகிய ஒற்றை எழுத்தின் முதல் நடுவிறுதியானவை. இதில் முதற்பாட்டு திருமந்த்ரத்

$திருவருளாலே—க. *ஸநயிக்ருதாயிகாரகவும்—க.
†விரஹக்ளெஶவஹாருகவும், உதவைஹ்ருஷணஹாஷணாநிவதகவும், வரொவஷெஶாருவகவும், வாஉதநிராவஸாநிவதகவும் என்றாற்போலே—வ. ‡பகவதநுபவ—வ. §அக்ஷரம்—க
||தலைக்கட்டு—க.

திலும் த்வயத்திலும் முமுக்ஷுவுக்கு ஸ்வரூபாநுஸந்தேயங்களான அர்த்தங்களை ஸூசிப்பிக்கிறது. ¶

அமலனாதி பிரான்
 அடியார்க்கு என்னையாட்படுத்த
விமலன் விண்ணவர்கோன்
 விரையார்பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன்
 நீள்மதிளரங்கத்தம்மான் திருக்
கமலபாதம் வந்து என்கண்ணின்
 உள்ளன வொக்கின்றதே. 1.

---

¶ 'இந்த ரஹஸ்யத்திற்குமூலப்ரபந்தம்' என்று அதிகம்—க.

அமலன்—ஸகல தோஷங்களுக்கும் எதிர்த்தட்டானவனாய் (அதாவது பிறருடைய ஸம்ஸாரமாகிற தோஷத்தைப் போக்கி மோக்ஷத்தை அளிப்பவனாய்), ஆதி—ஸர்வ ஜகத்காரணனாய், பிரான்—ஸர்வோபகாரகனாய், அடியார்க்கு—அவனுடைய தாஸர்களுக்கு, என்னை, ஆட்படுத்த—தாஸனாம்படி செய்த, விமலன்—ஒருவித குற்றமற்றவனாய், விண்ணவர் கோன்—நித்யஸூரிகளுக்கெல்லாம் அதிபதியாய், விரை ஆர் பொழில் வேங்கடவன்—வாஸனை நிறைந்த சோலைகளையுடைய திருமலையிலே நிற்கிறவனாய், நிமலன்—(அணுகவொட்டாமை என்னும்) தோஷமற்றவனாய், நின்மலன்—(தன் அடியார்களின் தோஷத்தைக் காணுதல் என்னும்) குற்றமற்றவனாய், நீதிவானவன்—(ஸ்வாமி, தாஸன் என்கிற) முறைதப்பாத பரமபதத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவனாய், நீள்மதிள்—உயர்ந்த மதிள்களையுடைய, அரங்கத்து அம்மான்—ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுகிற ஸர்வ ஸ்வாமியானவனுடைய, திருக்கமலபாதம்—அழகிய செந்தாமரை போன்ற திருவடிகள், வந்து—(தானாகவே) வந்து, என் கண்ணின் உள்ளன ஒக்கின்றவே—என்னுடைய கண்ணுக்கு உள்ளே இருப்பதுபோல் இருக்கின்றன.

(அமலன்) என்றது ஹேயப்ரதிபடன் என்றபடி; இத்தால் மோக்ஷப்ரதத்வம் சொல்லிற்றாயிற்று. இது ப்ரதானமான ரக்ஷகத்வமாகையாலே பிரியப் பேசப்படுகிறது. (ஆதி)- §"ஸஷ கர்த்தா ந க்ரியதே" இத்யாதிகளிற்படியே ஸர்வஜகத்காரணபூதன். இத்தால் 'காரணமே *ஸரண்யம்' என்கிறபடியே முமுக்ஷுவுக்கு சரணமாகப் பற்றப்படுமவன் என்று ஸூசிதம்: இக்காரணத்வமும் மோக்ஷப்ரதத்வமும் ஸத்வாரங்கள் போலேஸர்வலோகஸரண்யனுக்கு விசேஷணங்கள். (பிரான்)— †"கருணா காகுத்ஸ்த ஸர்வேஷு" இத்யாதிகளிற்படியே ‡ஸர்வோபகாரகன். இங்கு ஆத்மாக்களுடைய § ஸத்தாஸ்தாபனம் முதலாக, பரிபூர்ண கைங்கர்யப்ரதானபர்யந்தமாக ப்ரத்யுபகாராதிநிரபேக்ஷனானவனுடைய ஸமஸ்தோபகாரங்களெல்லாம் ஸாமான்யேன சொல்லப்படுகிறது. இதெல்லாம் ப்ரயோஜனபர்யந்தமான ரக்ஷணமே; இவை தம்மளவில் பர்யவஸித்தபடியிலே இம்மூன்று பதத்திற்கும் தாத்பர்யம். இது மேல் பாசுரங்களிலும் காணலாம்.

(அடியார்க்கு என்னை ஆட்படுத்த) என்கிற இடத்தில் 'அடியார்' என்கிற இத்தாலே த்ருதீயாக்ஷரத்திலே சொன்ன ஜீவபஹுத்வமும், ஜீவர்களுக்கு ஈஸ்வரனைக் காட்டில் வேறுபாடும், அந்யோந்யம் பிரிவும் காட்டப்படுகிறது. 'அடியார்' என்றால் ஸாமாந்யமாக சதுர்த்தியில் சொன்ன தாஸ்யத்வான்களையெல்லாம்

---

§ஸஷ கர்த்தா க்ரியதே.ஸ. *சரணம்-க. †கருணாம் ஸ காகுத்ஸ்த-ஸ. ‡ஸர்வோபகாரணம்-க. §ஸத்தாஸ்தாபனம்-க.

காட்டிற்றேயாகிலும், இங்கு ‘அடியார்’ என்கிறது [1]“யோ ஹ்யந்ய வாஸுதேவ ஸேவா ஸுபி நதம் விது:” என்னும்படி ஸுகவிஷயத்வாத்ருஹ்யாசோஷ்யஸூந ஜீவிக்களை. இப்படி ‘அடியார்க்கு’ என்று விஶேஷோபாதாநம் பண்ணுகையாலே ஈஸ்வராக்ஷேபத்தின் படியே நிருபாதிகசேஷிகள் வேறு இல்லாதபடியும் ஸௌபாதிகசேஷிகளோடு தமக்குத் துவக்கற்றபடியும் சொல்லிற்றாயிற்று. ஸர்வசேஷியாகையாலே ஸர்வத்தையும் யதேஷ்டமாக விநியோகிக்கப் ப்ராப்தனாய், நிரங்குசஸ்வதந்த்ரனாகையாலே ஸர்வத்தையும் யதேஷ்டமாக விநியோகிக்க சக்தனுமான ஸர்வேஶ்வரன் அநந்யப்ரயோஜநரான ஆஶ்ரிதர்க்கு ஸர்வமும் சேஷமாகக் கடவது என்கிற விநியோகவிசேஷத்தாலே ஸர்வருக்கும் பாகவதசேஷத்வம் நித்யஸித்தமானால், அநந்யப்ரயோஜநரான ஆஶ்ரிதர்க்கு பாகவதசேஷத்வம் ஈஶ்வரன் தன்னையும் *பாகவதரையுமொழிந்த அந்யரைப்பற்ற †சேஷத்வமில்லாதபடி வருகிறதாய், இதின் ஸீமையான கைங்கர்யமும் இப்படி வருகிறதாகையாலே ‘என்னை அடியார்க்கே ஆட்படுத்தினான்’ ‡என்கிற அவதாரணம் இங்கே விவக்ஷிதம். [1]“மற்றுமோர் தெய்வம் உளதென்றிருப்பாரோடுற்றிலேன்” என்றிறே இவர்களுடைய பாசுரம். (என்னை ஆட்படுத்த) [2]“யதீந்த்ரியஜிதா:” என்னும்படி ஜிதேந்த்ரியனாய்வைத்து அதற்குமேலே [3]“மாமேவ ப்ரபத்யந்தே” என்று இருக்கக்கடவ

[1]திரு. மொ. 8. 10. 3. [2] [3]கீதை. 16. 14. *பாகவதரை யொழிந்த—க. ‡என்ற-க. †சேஷத்வப்ரஸங்கமில்லாதபடி வருகிறதாயிற்று—வ.

என்னை ¹"அஹோதாரஸ்ய தே தாஸ:" என்னப் பண்ணின உபகாரத்திற் காட்டிலும் ²"உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்னப் பண்ணின இதற்கு மேலொரு உபகாரமுண்டோ என்று இப்பரமோபகாரத்தையும் பிரியப் பேசுகிறார். இது ஸ்லோகத்தின் தாத்பர்யம்.

கீழ்ச் சொன்ன §கர்த்ருத்வாதிகளிலே ³"எருத்துக் கொடியுடையான்" முதலான ருத்ராதிகளுக்குப் போலே அஜ்ஞாநாதிதோஷங்கள் இவனுக்கு உண்டாகில், இவன் முன்பு சொன்ன ஸாக்ஷாத் மோக்ஷப்ரதாநம் பண்ணவல்லனோ என்ன, (விமலன்)— நிர்தோஷன். இத்தால் ஸகலேதரவிலக்ஷணன் என்றதாயிற்று. இவ்வளவு ஸூரிகளுக்கும் இல்லையோ என்ன, (விண்ணவர் கோன்)- பரமஸாம்யத்தையுடையரான ஸூரிகளைக் காட்டில் வேறுபட்டவன்; இத்தாலே ஸூரிஸேவ்யமான பரத்வமும் தோன்றுகிறது. இப்படி எட்டாநிலத்திலே இருக்குமிருப்பு இங்குள்ளார்க்கு நிலமன்றே என்ன, (விரையார்பொழில் வேங்கடவன்). பரிமளம் வடிவு கொண்டாற்போலே இருக்கிற திருச்சோலைகளையுடைய திருமலையிலே ⁴"கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு' என்கிறபடியே எல்லாருக்கும் ஆஶ்ரயிக்கவும் அநுபவிக்கவுமாம்படி ⁵"இருள்தருமாஞாலத்துள் குன்றத்திட்ட விளக்காய் $நிற்கிறவன். அந்தமில் பேரின்பத்துள்ளாருடைய

¹மந்த்ரராஜபதம். ²தி. மொ. 8. 10. 3. ³பெரி. தி. 5. 3. 6.
⁴1 8. 3. ⁵10.6.1. §கர்த்ருத்வாதிகளாலே—வ $நிற்கிறவவன்-க.

ஸௌலப்யத்தைக் காட்டில் [1]"எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனுமாவேனே" என்னும்படி பிறந்த ஸ்தாவரங்களுடைய ஸௌலப்யம் அதிஶயிதமாயிருக்கும். இப்படி ஸர்வஸுலபனானாலும், [2]"அவ்வண்ணத்தவர் நிலைமை கண்டும் தோழீ அவரை நாம் தேவரென்று அஞ்சினோமே" என்னும்படி நிற்குமோவென்ன, (நிமலன்)- *ப்ரஹ்மருத்ராதிகளும் அஞ்சி அருளப்பாடு முன்னாக அணுகவேண்டும்படியான ஐஶ்வர்யத்திலே †குறும்பறுத்த நம்பிக்குக் கூசாதே நிரந்தர ஸம்ஶ்லேஷம் பண்ணலாம்படி தன் ஈஶ்வரச்சுணையாகிற ஆஶ்ரயண விரோதிதோஷத்தை மறைத்து, [3]"ஸ்வபுகவராயநா

[1]பெரு. தி. 4.10. [2]தி. நெடு. 21. [3]ஸ்ரீரங்க. ஸ்த. 2.

*ப்ரஹ்மருத்ராதிகள் அஞ்சி—க †குறும்பற்றநம்பி—க.

†குறும்பறுத்தநம்பி—முக்குறும்புகளையும் (குலம், தொழில், ஐச்வர்யம் என்றவற்றால் வரும் கர்வங்களை) நீக்கின பெரியார். குயவர் வகுப்பில் பிறந்தவரான ஒரு பக்தர் குறும்பறுத்த நம்பி எனப்படுவர். இவர் மண்ணாலே திருவேங்கடமுடையானுக்குத் திருமேனி ஏற்படுத்தி, அவருக்கடிமை செய்துகொண்டு வந்தார். தினமும் தன் தொழிலான மண் பாண்டங்கள் செய்வது முடியுமளவில், கையில் ஒட்டிய மண்ணைக் கழுவி, ஒரு புஷ்பமாகச் செய்து, அப்பெருமாள் திருமுடியில் அதைப் பரமபக்தியுடன் சாத்திவருவார். அக்காலத்தில் ஒரு ராஜபுத்திரன் ஸ்வர்ண புஷ்பங்களால் மாலைசெய்து திருவேங்கடமுடையானுக்குச் சாத்துவித்தான். அவன் முக்குறும்புள்ளவனாகையால், அது திருமுடியில் தங்கவில்லை. ஆவேசமுகத்தாலே 'குறும்பறுத்த நம்பி இடும்பூ நமக்கு உண்டு' என்று நியமனமாயிற்று. இப்படி குறும்பறுத்த நம்பி என்பவர் தம் ஜாதிவ்ருத்த நிகர்ஷத்தைப் பாராதே திருமுடிக்குப் பூ இட்டார் என்கிற சரித்திரம் இங்கே குறிப்பிடப்பட்டது. (காமம், வெகுளி, மயக்கம் என்பவைகளையும் முக்குறும்பு என்பர்.)

ஸுவிஜ்ஞாதஷ்ஙுதிஃ" என்கிறபடியே ஆஶ்ரிதவாஸ்தஸ்யத்தை ‡வெளியிட்டுநிற்குமவன். இப்படி ஸௌஸீல்யஸௌஸீல்யங்கள் உண்டாலும், ஆஶ்ரிததோஷத்தைக் காணுமாகில் அணுகக் கூசார்களோ என்னில், (நின்மலன்)- [1]"ஸுவிஜ்ஞாதா" என்றும், [2]"என்னடியார் அது செய்யார்" என்றும் சொல்லுகிறபடியே ஆஶ்ரிதருடைய தோஷதர்ஶநமாகிற ஸாரணதோஷமில்லாதவன். ஸர்வஜ்ஞனுயிருக்கச் செய்தே ஆஶ்ரிததோஷத்தைக் காணுன் என்றது, §காணுமதுவும் இவர்களுடைய தோஷத்தைக் கழிக்கைக் குறுப்பாம் என்றபடி.

'விமலன்' என்று தொடங்கி இவ்வஞ்சுபதங்களாலே நாராயணஸப்தத்தில் உபாயகத்வப்ராப்யத்வங்களுக்கு உபயோகமான உபயலிங்கமும் உபயவிபூதிநிர்வாஹகத்வமும் சொல்லிற்றுயிற்று; மேல் இவன் ஸ்வரூப ப்ராப்தசௌஹர்தமான $நிதியிலே நிரதரான நித்யஸூரிகளுக்கு ஸேவ்யனுமாப்போலே நமக்கும் ஸேவ்யனும் என்று வதார்த்திலே ¶கருத்தாலே சௌஹர்த ப்ரதிஸம்பந்தித்வத்தை அநுஸந்திக்கிறார் (நீதி வானவன்). இங்கு 'வான்' என்கிற சப்தம் ஸூரி ஸேவிதமான பரமபதத்தைச்சொல்லுகிறது. 'நீதியை நடத்துவிக்கும் வானிலே வதிக்குமவன்' என்னவுமாம். [3]"தேந வஷயதே லோகா ஊயாயொநெ ந கௌஸ்வட்" என்கிறபடியே கலக்குவாரும், [4]"ஸுவஜாநஸி ஊம ஊருஸா" என்கிறபடியே கலங்குவாருமில்லாத தேச

---

[1] ஸஹஸ்ரநாம. [2] பெரி.தி. 4 9.2. [3] பார. உத். 67. 15.
[4] கீதை. 9. 11. ‡வெளியிடாநிற்குமவன்—வ.
§காணுமென்றதுவும்—க. $நீதியிலே—க. ¶கருத்தான-வ.

மாகையாலே [1]"ஞாஸ்ஸெளஸ்யஹ்யொமெந ஜ்ஞாதீநாம் வகஸொஃஹம்" என்றும், [2]"வாஸெஸா ஸம்ஜ்ஞாஃஜ்ஞகிஃநெஹா ஃயூவஷிதெ" என்றும் இங்கு பிறக்கும் ஸம்ஸெஷிதவத்தின் மாருட்டமில்லாத பரமபதத்திலே நித்யவாஸம் *பண்ணுகிறவன் என்றதாயிற்று.

இப்படி ஸர்வஸேஸ்யனை †ஸர்வஸேஷி [3]"விபீடணற்கு வேறாக நல்லான்" என்கிறபடியே தமக்கு இப்போது விசேஷித்து அநுபவிக்கலானபடியைப் பேசுகிறார்: (நீள்மதிளரங்கத்தம்மான்): 'அயொஜெ' என்றும், 'அவாராஜிதெ' என்றும் சொல்லுகிற கலங்காப் பெருநகரத்தின்படியை கொடியணி நெடுமதிள்களாலே ஸுரக்ஷிதமான ‡ஸ்தலவிஶேஷத்திலே காட்டி அயர்வறுமமரர்களுக்கும் அதிபதியான தன்படியை [4]"செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்" ஆகாரவிஶேஷத்தாலே அறிவித்துக்கொண்டு, ஶேஷிக்வத்தின் எல்லையிலே தான் நின்றாற்போலே §ஶேஷக்வத்தின் எல்லையிலே என்னை நிறுத்தின ஸூதஞ்ஸூரி. 'அரங்கத்து அம்மான்'— நீர்மைக்கும் மேன்மைக்கும் எல்லையானவன்.

இவனுடைய உபாயக்வப்ராப்யக்வங்களில் உறப்புண்டான திருவடிகளை அநுபவிக்கிறார்: (திருக்கமலபாதம்). பாவநக்வபோக்யக்வங்களாலே ஸௌஹார்யங்களான திருவடிகள்; திருவுக்கு லீலாகமலம் போலே

---

1 [2]வி. பு. 1 17. 23. [3]தி. மொ. 6 10. 4. [4]நா. தி. 11. 3.
*பண்ணுகிறவிமலன் என்றதாயிற்று—வ. †ஸர்வசேஷித்வேந செல்வ விபீடணற்கு—வ. 'விபீடணற்கு நல்லான்' என்று பிரபந்த பாடம். ‡ஸ்தல விசேஷத்தாலே அயர்வறுமமரர்களுக்கு அதிபதியானபடியை—க. §சேஷத்வநிலையிலே நிறுத்தின—க.

இருக்கிற பாதம் என்னவுமாம். (வந்து)- 'வந்து' $என்கிற இத்தாலே ஓடின தம்மைத் தொடர்ந்தபடியும் அயத்நஸாத்யங்களானபடியும் தோன்றுகிறது. இத்திருவடிகளில் வைத்த கண் வாங்க வொண்ணாதபடியான போக்யதாதிஶயத்தை ஒரு உத்ப்ரேக்ஷையாலே அருளிச்செய்கிறார் (என் கண்ணினுள்ளன ஒக்கின்றவே). தேவாதிகளில் தலைவரான ப்ரஹ்மாதிகளுடையவும், ஸநகாதிகளான யோகிகளுடையவும் திவ்யசக்ஷுஸ்ஸுக்களுக்கும்கூட தூரமாயிருக்கக்கடவவை ப்ராக்ருதனான என்னுடைய மாம்ஸசக்ஷுஸ்ஸுக்களுக்கும் ப்ரத்யக்ஷமாயிராநின்றன என்று ஆஶ்சர்யப்படுகிறார். 'நீள்மதிளரங்கத்தம்மான் திருக்கமலபாதம்' என்று த்வயத்தில் பூர்வோத்தர நாராயணஶப்தார்த்தத்தையும் சரணஶப்தார்த்தத்தையும் அநுஸந்தித்தபடி.

இப்பாட்டால், மோக்ஷப்ரதத்வமும், *ஜகத்காரணத்வமும், ஶரண்யத்வமும், மற்றும் ஸர்வப்ரகாரோபகாரகத்வமும், ஸர்வாவிஶேஷவத்த்வமும், ஸ்வாதந்த்ர்யமும், அவற்றில் ஸாரதமமான உபகாரவிஶேஷமும், நித்யநிர்தோஷத்வமும், நித்யஸூரிநிர்வாஹகத்வமும், நித்யவிக்ரஹவத்த்வமும், ஸர்வஸுலபத்வமும், ஸௌஶீல்யமும், வாத்ஸல்யமும், கைங்கர்யப்ரதேஶத்வமும், †கைங்கர்யஸ்தாநவிஶேஷவத்த்வமும், ஸர்வஸ்வாமித்வமும், திருவடிகளினுடைய பாவநத்வமும், போக்யத்வ

$ என்கிற இடத்திலே ஓடிவந்தெம்மைத் தொடர்ந்த—க.

*ஜகத்காரணத்வமும் மற்றும் ஸர்வப்ரகாரோபகாரகத்வமும், அவற்றின் ஸாரதமமான உபகார விசேஷத்தையும்—க,

†கைங்கர்யஸ்தான விசேஷமும்—வ, விசேஷத்வமும்—க.

மும், அவற்றைத் தான் அநாயாஸமாக ‡அநந்யத்ருஷ்டி களாகக் கொண்டு அநுபவிக்கப் பெற்றபடியையும் $முன்னிட்டுக்கொண்டு ஸ்ரீயஃபதியினுடைய ¶ஸர்வ காஷ்டாப்ராப்தங்களான குணப்ரகர்ஷங்களை அநு ஸந்தித்தார்.

அவற்றில் ஸம்ஸாரநிவர்த்தகத்வகாஷ்டையாவது- களையற்ற கைங்கர்யத்தைக் கொடுக்கை; *காரணத்வ காஷ்டையாவது— காரணாந்தரங்களெல்லாம் தான் இட்ட வழக்காய், தனக்காதல், தன்னுடைய ஜ்ஞாந ஶக்த்யாதிகளுக்காதல், ஒரு காரணஸாபேக்ஷதையன்றிக் கே இருக்கை; ஶரண்யத்வகாஷ்டையாவது—தன்னை ரக்ஷகனாகப் பற்றினார்க்குத் தன்னை யொழிய மற்றொருவரை ரக்ஷகராகப் பற்ற வேண்டாதபடி இருக்கை. †உபகாரகத்வகாஷ்டையாவது— ஒரு க்ஷுத்ரவ்யாஜத்தை அவலம்பித்து, உபயவிபூதிவிஶிஷ்டனான தன்னை அநந்யார்ஹனாக்கக் கொடுத்தும், அதற்குமேல் கொடுக்கலாவது இல்லாமையாலே நிர்விண்ணனாயிருக்கை; க்ருபாகாஷ்டையாவது— ஶத்ருவினுடைய ஸம்பந்திகளும்கூட த்யாஜ்யம் ‡என்ற பரிவர் முன்னே 'ஶத்ரு தானும் இசையில் ஸ்வீகரிப்பேன்' என்று எதிர்பேசும்படியான இரக்கத்தையுடையனாய், §அவர்கள் தாங்களும் இவனைக் கைக்கொள்ளும்படி பண்ணுகை; ஸ்வாதந்த்ர்யகாஷ்டையாவது- தன்னையும் பிறரையும் தான்

‡அநந்யத்ருஷ்டியாக? $முன்னிட்டு ஸ்ரீய:பதியினுடைய—க.
¶ஸர்வகாஷ்டாப்ராப்த குணப்ரகர்ஷங்களை—க.
*காரணகாஷ்டையாவது—க. †உபகாரத்வகாஷ்டையாவது—க.
‡என்றும் பரிவார்—க. §அவர்தாங்களும்—க.

நினைத்த நிலைகளிலே நிறுத்தும்போது விலக்கவல்லாரன்றிக்கே யிருக்கை; நிர்தோஷத்வமாவது— தோஷயுக்தங்களான ஹேயங்களோடு உண்டான ஸம்ஸர்க்கத்தாலும், பிறர்க்கு அஜ்ஞாநது:க்கஹேதுக்களானவற்றைத் தான் அநுஷ்டித்தாலும், தனக்கு அஜ்ஞாநது:க்கங்கள் வாராதிருக்கை; ஸ்வாமித்வமாவது— விபூதிகளையெல்லாம் தனக்கு விபூதியாக உடையனாயிருக்கை; ஸௌலப்யமாவது— அகல நினைப்பார்க்கும் அகலவொண்ணாதபடி அணுக நிற்கை; ஸௌஶீல்யமாவது— தன் பக்கல் ஸாம்யத்தை ஶங்கிப்பார்க்கும் வெளியிடுவார்க்கும் தானே மறுமாற்றம் சொல்லி, மேலும் தன்னைத் தாழவிட்டுப் பரிமாறுகை; வாத்ஸல்யமாவது— $அந்தரங்கராயிருப்பாரும் ஆச்ரிதவிஷயத்தில் ஆயிரங்கோடி குற்றம் காட்டிலும் அநாதரம் பிறப்பிக்கவொண்ணாதிருக்கை; ஶரண்யத்வமாவது— தன் விசேஷணமாகவல்லது மற்றொரு ஶரண்யமில்லாதிருக்கை; ஆஶ்ரிதபக்ஷபாதித்வமாவது— *ஸர்வஸமனான தான் ஆஶ்ரிதஸங்கல்பத்தோடே விரோதித்த தன் ஸாமாந்ய ஸங்கல்பத்தை அஸமஞ்ஜஸமாக்கி, அநிதரஸாதாரணமான ஆஶ்ரிதரக்ஷணத்தைப் பண்ணுகை; போக்யத்வமாவது— தன் ஸ்வரூபத்தை அநுபவித்தால் தன் விசேஷணமாக ஸர்வத்தையும் அநுபவிக்குமது அதின் திவலையோடு ஒத்திருக்கை; அயத்நபோக்யத்வ

$அந்தரங்கராயிருப்பார்க்கு ஆச்ரயவிஷயத்தில் ஆயிரங்கோடி குற்றம் காணிலும் அநாதரம்—க. *ஸர்வவர்ண ஸமனான—க.

ஸாமெஷியாவது— *ஹோமாயமான காரணஹேரணமும் வேண்டாதபடி தென்றலும் பரிமளமும் வந்தாற்போலே வந்து விலக்கவொண்ணாதபடி ஸந்நிஹாவஹமா யிருக்கை. இவையெல்லாம் இப்பதங்களில் அடைவே ஆழ்வார் அநுபவித்தபடியை ஸந்வஸிப்பது. 1.

இவன் திருவடிகளில் சிவப்புக்கு நிகரான திருப்பீதாம்பரம் தன் சிந்தைக்கு விஷயமாகிறதென்கிறார்:

உவந்தவுள்ளத்தனாய்
 உலகமளந்தண்டமுற
†நிவந்த நீண்முடியன்
 அன்று நேர்ந்த நிசாசரரைக்
கவர்ந்தவெங்கணைக் காகுத்தன்
 கடியார் பொழில் அரங்கத்தம்மான் அரைச்
சிவந்த ஆடையின் மேல்
 சென்றதாம் என் சிந்தனையே 2.

*ஹோமாய்யமாக—க. †நிமிர்ந்த; நிமிர்ந்த.

உவந்த உள்ளத்தனாய்—ஸந்தோஷங்கொண்ட மனத்தை யுடையவனாய், உலகமளந்து—எல்லா லோகங்களையும் (தன் திருவடிகளாலே) அளந்து, அண்டம் உற—அண்டகடாஹத்திலே இடிக்கும்படி, நிவர்ந்த—நிமிர்ந்த, நீள்முடியன்—பெரிய கிரீடத்தையுடையவனாய், அன்று—(ஸகல ஸாதுக்களுக்கும் துன்பம் நேர்ந்த) அன்று, நேர்ந்த—எதிர்த்துவந்த, நிசாசரரை—(தாடகை முதல் ராவணன் வரையிலுள்ள) ராக்ஷஸர்களை, கவர்ந்த—விழுங்கின (கொன்ற), வெங்கணை—மிகக்குரூரமான பாணங்களையுடைய, காகுத்தன்—ஸ்ரீராமனாய், கடி ஆர்—பரிமளம் நிறைந்த பொழில்—சோலைகள் சூழ்ந்த ஸ்ரீரங்கத்திற்குள்ளே கண்வளர்ந்தருளுகிற ஸர்வஸ்வாமியான பெரிய பெருமாளுடைய, அரை—திருவரையில் சாத்திய, சிவந்த ஆடையின்மேல்—திருப்பீதாம்பரத்தின்மேலே, என் சிந்தனை—என்னுடைய மனது (கூட) சென்றது ஆம்—சென்றதே! (என்று ஆச்சர்யப்படுகிறார்).

(உவந்த உள்ளத்தனாய்)- மஹாபலியாலே அபஹ்ருதமான ராஜ்யத்தை மீட்டுத்தரவேண்டும் என்று இந்த்ராதிகள் இரக்க, [1]"உதாரா: ஸர்வ ஏவைதே" என்கிறபடி இவர்கள் பக்கலிலே ப்ரீதமான திருவுள்ளத்தையுடையனாய், அஸுரனேயாகிலும் *ப்ரஹ்லாதனோடு உண்டான குடல்துவக்குப் பாவித்து, ஆஶ்ரிதவிரோதியானை மஹாபலியை அழியச் செய்ய நினையாதே அவனுடைய ஔதார்யத்திற்கு அநுகுணமாகத் தான் இரப்பாளனாய்ச் சென்று அவன் கொடுக்க வாங்குகையாலே அவனளவிலும் அநுக்ரஹயுக்தனாய், அபேக்ஷாநிரபேக்ஷமாக எல்லார் †தலையிலும் தன் திருவடிகளை வைக்க, விலக்காதவளவாலும் ஸர்வவிஷயத்திலும் உவந்தவுள்ளத்தனாய், (உலகமளந்து)— ‡'அளவுபடக் கொடுத்தோம்' என்றிருக்கிற அஸுரன் முன்னே எல்லா லோகங்களையும் தன் திருவடிகளாலே அளவுபடுத்தி (அண்டம் உற நிமிர்ந்த நீள் முடியன்)- மேலே கவிற்ற கநககலஶம் போலே இருக்கிற §ப்ரஹ்மாண்டபித்தியிலே கிட்டும்படி விஜ்ரும்பித்த பெரிய திருவபிஷேகத்தையுடையவன்; அவன் தன்னைப் போலே திருவபிஷேகத்திற்கும் அவனோடொக்க வளருகைக்கீடான ஶக்தி உண்டு. கர்மவஶ்யதை தோற்றும்படி பிறவி தொடக்கமாகச் சடையும் குண்டிகையும் சுமந்து திரிகிற ||பரிச்சிந்நேஶ்வரர் பார்த்து நிற்க இப்படி

---

[1] கீதை 7. 18. *ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானோடு உண்டான—வ. குடல்துவக்குப் பாவித்து-க குடல்துவக்கால் ஆநுகூல்ய—வ. †தலையிலும் திருவடிகளை—க. ‡அளவுபட்டுக்கொடுத்தோமென்றிருக்கிற—க. §ப்ரஹ்மாண்டத்தில்—க. ||பரிச்சிந்நேச்வரன்பார்த்து-க.

முடிசூடி நிற்கையாலே உபயவிபூதி நிர்வாஹகத்வமும் ஸூசிதமாகிறது. இத்திருவிக்ரமாவதாரம் சொன்ன இத்தாலே ஸம்ஸ்பர்ஶ*ஸாக்ஷாத்விஷயரான இந்த்ராதிகள் இரப்பாளரானபடியும், [1]"குறைகொண்டு நான்முகன்" இத்யாதிகளிற்படியே ப்ரஹ்மா திருவடி விளக்கி க்ருதார்த்த னானபடியும், ருத்ரன் தீர்த்தப்ரவாஹம் பெற்று ஸநாத னானபடியும் சொல்லித்தாயிற்று. இத்தால் †முன் பாட்டில் சொன்ன இஷ்டப்ராபகத்வத்தையும் உதாஹரித்த தாய், இனி அநிஷ்டநிவர்த்தகத்வத்தையும் உதாஹரிக் கிறார்: (அன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்த வெங்க ணைக் காகுத்தன்). ‡தேவர்களும் ரிஷிகளும் கூடக் குடி யிருக்கவொண்ணாதபடி த்ரைலோக்ய க்ஷோபம் பிறந்து தேவர்கள் சரணாகதரானவன்று சக்ரவர்த்தித் திருமக னாய் அவதரித்து, தாடகா - தாடகேய - விராத - கபந்த - கர - தூஷணாதிகளை நிராகரித்து, லங்கைக்குப் பரிகையான லவணார்ணவத்தை பர்வதங்களாலே பண்பு செய்து, கொம்பிலே தத்தித் திரியும் குரங்குப் படையைக் கொண்டு லங்கையை அடைமதிள்படுத் தினவன்றும் பெருமாளுடைய ப்ரபாவம் அறியாதே §விளக்குவிட்டில் போலே வந்து எதிர்ந்த ¶பகல்போர் அறியாத க்ஷுத்ரயோனிகளையெல்லாம் 'எனக்கு எனக்கு' என்று இரையாகக் கைக்கொண்ட தீக்ஷ்ணஸ்வபாவங் களான திருச்சரங்களையுடையனாய். [2]"வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்" நின்றவன்; (காகுத்தன்)—

[1] 4. அ.9. [2] பெரு. தி. 10. 1. *சங்காவிஷயமான—க.
†முன் பாட்டினில்........ உதாஹரித்ததாய், அநிஷ்ட-க. ‡தேவர் களுக்கும் ரிஷிகளுக்குங் கூடியிருக்க—க. குடியிருக்க—வ.
§விளக்குவீட்டில் போலே—க. ¶பகல்போது அறியாத—வ.

மாயாவிகளான ராக்ஷஸரும் கூட மோஹிக்கும்படி மநுஷ்யபாவத்தை முன்னிட்டு *நின்றவன். (கடியார் பொழில் அரங்கத்தம்மான்)— ஸூரிகள் முதலாக ஸ்தாவரஜங்கமங்களைக்கொண்டு நித்யஸேவகராய் நிற்கிற ப்ராகாரங்களாலே சூழப்பட்ட கோயிலாழ்வாருக்குள்ளே ப்ரஹ்மாதிகள் ஆராதிக்க, ஸர்வஸ்வாமித்வம் தோற்றக் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய. (அரைச் சிவந்த ஆடையின்மேல்)— [1]"படிச்சோதி யாடையொடும் பல்கலனாய் நின்பைம்பொற்கடிச் சோதி கலந்ததுவோ" என்னும்படி திகழாநின்ற திருவரையிலே பாலஸூர்யகிரணஸம்பர்க்கத்தாலே போல பாடலமாய் மரகதகிரிஶிகரத்திலே ஸந்த்யாதபம் பரந்தாற்போலே †இருக்கிற திருப்பீதாம்பரவிஷயமாக. (சென்றதாம் என் சிந்தனையே)— அநாதிகாலம் அநுசித விஷயங்களிலே ஓடி, அவர்கள் ‡ஆடையிலே கட்டுண்ட என்சிந்தை இவன் திருவடிகளைப் பற்றின என்னாலும் மீட்கவொண்ணாதபடி திருப்பீதாம்பரத்திலே சென்று துவக்குண்டது. 'என் சிந்தனை சென்றதாம்' என்கையாலே ஆஸ்சர்யம் தோற்றுகிறது. 'சென்றது'- §நான் ப்ரேரிக்கப் போந்ததன்று; விஷயவைலக்ஷண்யத்தாலே ஆக்ருஷ்டமாயிற்று. 2.

இப்படி இரண்டு பாட்டாலே பகவச்சேஷத்வபர்யவஸாநத்தையும் அந்யசேஷத்வநிவ்ருத்தியையும் அநுஸந்தித்து, அநந்தரம் சேஷபூதமான சேதநாசேதந

[1] 3. 1. 1. *நின்றவன் காகுத்தன்—க. †இருக்கிற பீதாம்பர-க, ‡அவர்களாளுடையிரல-க; அவர்கள் இடையிலே—**ஙு**. §நாம்—க.

ஸமஸ்த ஶ்ருதிவாக்யமான த்ருதீயாக்ஷரம் முதலான த்ருதீயபதத்தாலே ஶேஷத்வஜ்ஞாநஹீநராயும், விஶேஷமில்லாத ஶேஷத்வஜ்ஞாநமுடையராயும், காதாசித்க ஶேஷத்வஜ்ஞாநவான்களாயுமுள்ள ஜீவர்களெல்லாம் தந் தாமுடைய ஜ்ஞாநாநுரூபமாக ப்ரதிகூலாநுகூலௌதாஸீந்யப்ரவ்ருத்திகளிலே நிற்கிற நிலையை உதாஹரித்துக் கொண்டு, ஸம்வாதஸந்தர்ப்பத்தில் தமக்கிடையிலே பெற்றதொரு ஶ்ரவணத்தை ஸந்தர்ஶித்துப் ப்ரீதராகிறார்.

மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள்
சந்திசெய்யநின்றான் அரங்கத்தரவினணையான்
அந்திபோல் நிறத்தாடையும் அதன்மேல்
அயனைப் படைத்ததோர் எழில்
உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே. 3.

மந்தி—ஆண் குரங்குகள், பாய்—(ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளையில் இடைவிடாமல்) பாய்ந்தபடியே யிருப்பதாய், வட—(தமிழுக்கு) வடவெல்லையும், வேங்கடம்—வேங்கடாத்ரி என்னும் பெயரையுடையதுமான, மாமலை—பெரியமலையிலே, வானவர்கள்—முக்தரும் நித்யரும் (தேசத்திற்குத் தக்க சரீரங்களோடு), சந்தி செய்ய நின்றான்—(புஷ்பங்களைக் கொண்டு) ஆராதிக்க நின்றவனாய், அரங்கத்து—ஸ்ரீரங்கத்திலே, அரவின் அணையான்—ஆதிசேஷனாகிற மெத்தையிலே கண்வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளுடைய, அந்திபோல் நிறத்தாடையும்—செவ்வானம்போன்ற நிறத்தையுடைய பீதாம்பரமும், அதன் மேல், அயனைப்படைத்தது—ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த, ஓர் எழில்—ஒப்பற்ற அழகையுடைய, உந்திமேலதன்றோ—திருநாபி கமலத்தின்மேலல்லவா இருக்கின்றது, அடியேன் உள்ளத்து—அடியேன் மனஸ்ஸில் பிரகாசிக்கிற, இன் உயிர்—இனிதான ஆத்மஸ்வரூபம்.

(மந்திபாய் வடவேங்கடமாமலை)— வனசரரான ஸம்ஸாரிகளுக்கு நிஷித்தமான வானரவம்சம் *நாநா ஶாகையிலுள்ள வ்ருக்ஷங்களைப் புஜிப்பதாக [1]“கதாகதம் காமகாமா லபந்தே” என்கிறபடியே ஒன்றைவிட்டு ஒன்றிலே பாய்ந்து திரிகைக்கு நிலமாய், கலியுகத்தில் ஸாத்விகஸத்வாவளையுடைத்தாக ஸாராஸாராவிவேகமாகை யாலே ஆழ்வார்கள் அவதரிக்கப்பெற்ற ப்ரபந்நாபாஷா க்ஷேத்திற்கு †உத்தராவதியாயிருந்து ஸாராஸாரவிவேகமாய், ஈஶ்வரன் தன்னைப் போலே ஸ்வாஸ்ரிதவர்க்கம் விஷதிஷ்ணாவங்களால் உண்டான உத்கர்ஷத்தை யுடைத்தான திருமலையிலே. (வானவர்கள் சந்திசெய்ய நின்றான்) பரமபதத்திலே கைங்கர்ய ஸாம்ராஜ்யத் திற்கு அபிஷிக்தரான முக்தரும் நித்யரும் தேஶோசித மான தேஹங்களைக்கொண்டு உசிதமான கைங்கர்யத் தைப் பண்ணி, இவர்கள் ஆஶ்ரயிக்கைக்கு உத்தேஶ்யனாய் நின்றான்.

(அரங்கத்தரவினணையான்)- ஏற்றமுள்ளவளவும் ஏறவேண்டும்படியான திருமலையாழ்வாரும் பரமபத ஸாதநீயம் என்னும்படி எளிதாகக் கிட்டலாம்படியான கோயிலாழ்வாருக்குள்ளே [2]“ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யும்” வானவர் களுக்குப் ‡படிமாவாய், நிஶ்ஶேஷஜகதாதாரபாராவான தன்னை தரிக்கைக்கீடான ஜ்ஞாநபலாதிப்ரகர்ஷத்தை யுடையனாய், ஸாரஸௌகுமார்ய§ஶீதளரூபமான திரு

---

[1] கீதை 9. 21. [2] 3. 3. 1. *நாநாஶாகியிலுள்ள—க.

†உத்தராவதியாயிருந்துள்ள ப்ராணவித்தமாய்—க.

‡படிமா=ஒப்பு; அதாவது திருஷ்டாந்தம். §சீதளமான—க.

வரவணையிலே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமானுடைய (அந்திபோல் நிறத்தாடையும்)-ஆஶ்ரிதருடைய அஜ்ஞாநாந்தகாரத்தைக் கழிக்கவல்ல ஸஜ்ஞாந ஸூர்யோதயத்திற்கு ஸந்த்யாவஸரம்போலவும், அவர்களுடைய தாபத்ரயங்களைக் கழிக்கைக்கு ஸாயம் ஸமயம் போலவும், *புகர்ந்த நிறத்தையுடைத்தான [1]"செவ்வரத்தவுடையாடையும்; இது மேலில் ஸந்நிதாநத்தை ஸமுதாயத்தைப் ஸந்நவிஷ்டத்தை †ஸந்நவழித்தபடி. மேல் ஸந்நிதாநம் ஏதென்ன, (அதன்மேல் அயனைப் படைத்ததோர் எழில் உந்தி)-ஸந்நிதமான திருப்பீதாம்பரத்திற்கு மேலாய், இதன் நிறத்திற்கு நிகரான சிவந்த தாமரைப் பூவையுடைத்தாய், அதின்மேலே ஸமஷ்டிஸ்ருஷ்டிஸமயத்திலே முற்பட அயோநிஜனை ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த அதிதீயமான அழகையுடைத்தான திருவுந்தி. ப்ரஹ்மாவினுடைய ஸ்ரஜத்வம் சொல்ல,[illegible]கைமுதிகந்யாயத்தாலே ருத்ரேந்த்ராதிகளுடைய ‡ஸ்ரஜத்வமும் சொல்லிற்றும். இத்தாலே தேவதைகளுக்கு ஶ்ரிய:பதியை யொழிய காரணாந்தரமும் ரக்ஷகாந்தரமும் இல்லை யென்றதாயிற்று. இங்கு ப்ரஹ்மாவைச் சொன்னது முமுக்ஷுக்களை ஸ்ருஷ்டித்த உபகாரத்திற்கு உதாஹரணமுமாகிறது. (மேலதன்றோ) என்றது இத்திருவுந்தியையே ஸந்நிதாநமாகக் கொண்டன்றோ இருக்கிறது என்னவுமாம். §இதனுடைய அநுபவம் இது இட்ட வழக்.

[1]தி. மொ. 8. 1. 7. 1 சிவந்தநிறத்தையுடைய ஆடையும்—ஸ.
*புகர்த்த—க. †அநுபவித்தபடி—க. ‡ஸ்ருஜ்யத்வம்—க.
§இவனுடைய அநுபவமிட்ட வழக்காய்—க.

காயிருக்கிறது என்னவுமாம். (அடியேன் உள்ளத்தின்னுயிரே)- [1]"ஸூக்ஷ்மாஸ்ஸம் ஹரேஃ ஸ்தூலம் *ஸ்தூலாவம் ச வக்ஷா ஸர" என்கிறபடியே பரமகாருணிககடாக்ஷத்தாலே ஸ்தூலாவக்ஷாஸ்ஸ்வாதிஷ்டாயமுடையேனான என்னுடைய ஸம்ஸ்காரமான மநஸ்ஸிலே ப்ரகாசிக்கிற ஸ்தூலாதி தசமான என் ஆத்மஸ்வரூபம். 'உள்ளம்' என்று ஹ்ருதயஸ்வரூபத்தைச் சொல்லவுமாம். 'இன்னுயிர்' என்று ஸம்வந்தஸ்வத்திற்கு அநுரூபமாகையாலே †இனிதான ப்ராணாதிகளைச் சொல்லவுமாம். [2]"ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" [3]"ஜீவிதா ஜதப்ராணாஃ" இத்யாதிகளை இங்கே அநுஸந்திப்பது.

இரண்டாம் ‡பாட்டாலும் மூன்றாம் ‡பாட்டாலும் ப்ரஹ்மாதிகளுடைய §கர்மாதிகாரிகமும் கர்த்ருத்வாதிகளும் சொல்லித்தாயிற்று. நாலாம் பாட்டாலே ப்ரஹ்மாதிகள் வரம்கொடுத்து வாழ்வித்த இராவணனை நிராகரித்த வ்ருத்தாந்தத்தாலும் தேவதாந்தரங்களுடைய க்ஷுத்ரத்வத்தை, [4]"ப்ரஹ்மா ஸ்வயம்பூஶ் சதுராநநோ வா ருத்ரஸ் த்ரிநேத்ரஃ" இத்யாதிகளிற்படியே அவர்களுடைய அஸ்வதந்த்ரத்தையும் அநுஸந்தித்துக்கொண்டு ப்ரஹ்மாதிகளையெல்லாம் ¶அகம்படியிலே வைத்து உய்யக்கொண்ட ஸ்ரீசத்தையை உடைத்தான திருவயிற்றினுடைய $சிறுமை பெருமைகளால்

---

1 [2]கீதா. ஸங். 24. [3]கீதை 10. 9. [4]பா. ஸா. 51. 45.
*ஸ்தூலாவம் ச—க. †இனித் தான் ப்ராமாணிகிகளை—க.
‡பாட்டிலும்—வ. §கர்மாதிகாரத்வமும்-க. ¶அகம்படியிலே ஏகதேசத்திலே வைத்துக்கொண்ட=க. ¶அகம்படியிலே—உள்ளே.
$சிறுமை பெருமைகளுண்டான—க. சீர்மை—வ.

உண்டான அவாப்தஸமஸ்தகாமத்வத்துக்கு அடையவளைந்தான் போலே இருக்கிற *உதரபந்தம் நம்முடைய சிறிய †திருவுள்ளத்திற்குள்ளே வெளியிற்போலே இடம் கொண்டு உலாவா நின்றது; இது ஒரு ஆஶ்சர்யம் என்கிறார்.

கீழ் மூன்று பாட்டாலும் ஆஶ்ரயணீயத்வம் ப்ரதிஷ்டிதமாய், நாலாம் பாட்டாலே [1]"ந நமேயம் து கஸ்யசித்" என்ற வணங்கலிலரக்கனைத் தலைசாய்த்து [2]"நமோ நம:" என்கிறபடியே முமுக்ஷுக்களுடைய மநஸ்ஸை அஹங்காரமமகாரதூஷிதமாகாதபடி பண்ணிக்கொடுக்கிற சக்ரவர்த்தித் திருமகனுடைய சரித்திரத்தை முன்னிட்டு 'நானும் என்னுடையதன்று; மற்றும் என்னுடையதாவன ஒன்றுமில்லை' என்கிற நமஶ்ஶப்தார்த்தத்தை மறைபொருளாக அநுஸந்திக்கிறாராகவுமாம்.

சதிரமாமதிள் சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்(து)
உதிரவோட்டி ஓர் வெங்கணைஉய்த்தவன் ஓதவண்ணன்
மதுரமாவண்டுபாட மாமயில்
ஆடரங்கத்தம்மான் திருவயிற்(று)
உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே. 4.

[1]ரா. யு. 36. 11 [2] ஸாத்வ. ஸ. *திருவுதரபந்தம்—வ.
†திருவுள்ளத்திற்குள்ளே கண்டுவேயிற்போலே—க.

சதிர - வலிமையுள்ள, மாமதிள்சூழ் - உயர்ந்த மதிள்களாலே சூழப்பட்ட, லங்கைக்கு இறைவன் - லங்கைக்கு அதிபதியான ராவணனுடைய, தலைபத்து உதிரவோட்டி - (முதல் நாள் சண்டையில் வீட்டிற்குப் போகும்படி ஓட்டி மறுநாள்) பத்துத் தலைகளும் சேர்ந்தாற்போல் உதிரும்படியாக, ஓர் வெங்கணை - கோபத்தை

(சதிரமாமதிள் சூழ் இலங்கைக்கிறைவன் தலை பத்து உதிர) ஶாலவ்யூதங்களைச் *சேர்த்து இசைத்தாற் போலே [1]செறிவும் திண்மையும் உயர்த்தியும் உடைத்தாய், எட்டுத் திக்குகளிலுள்ள திக்பாலர்களுக்கும் எட்டிப் பார்க்கவொண்ணாதிருக்கிற மதிள்களாலே †இத்தவிடம் முறிந்தவிடம் இல்லாதபடி எங்குமொக்க சூழப்பட்டு ஜலதுர்கம் - கிரிதுர்கம் - வநதுர்கங்களாலே துர்கங்களுக்கெல்லாம் ‡உபமானமாம்படி ப்ரஸித்தமான லங்கைக்கு ஈஶ்வரனாய், தேஹபல - வரபல - ஸைந்யபல - ஸேநாபலங்களாலே செருக்கனாய், மால்யவான் அகம்பநன் மாரீசன் முதலான ராக்ஷஸரோடு ஹநுமான் விபீஷணன் முதலான ஸஜ்ஜநர்களோடு வாசியற [2]அவிஶிதமாகப் பேசப்பட்ட பெருமாள் பெருமையை §அறிந்து வைத்தும் கண்டும் திகேட்டான்படியே [3]"தேந தேவ ஸஹஸ்ரேண

---

[1]செறிவு=நெருக்கம். திண்மை=உறுதி. [2]அவிஶிதமாக=அபிப்ரிராயபேதமில்லாமல் [3]ரா. ஸு. 26 21.

*சேர்த்திச் சேர்ந்தாப்போலே—க. சேர்த்தாற்போலே—வ.

†இத்திடமுறிந்திடமில்லாதபடி—க. ‡மூப்பாம்படி—வ.

§அறிந்துவைத்துக் கண்டு ம்நி கேட்டானபடியே—க.

---

உடைய ஒப்பற்ற பாணத்தை, உய்த்தவன் - ப்ரயோகித்தவனும், ஓதவண்ணன் - கடல்போல் ச்யாமளமான திருமேனியையுடையவனும், மதுரமா வண்டு பாட - இனிமையான சிறந்த வண்டுகள் பாட, மாமயில் ஆட - குணுகங்களான மயில்கள் ஆட, அரங்கத்து அம்மான் - ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனை பெரியபெருமாளுடைய திருவயிற்று உதரபந்தம் - திருவயிற்றின் மேல் அணியப்பட்ட உதரபந்தம் என்னும் அரைப்பட்டிகை, என்னுள்ளத்துள் நின்று - என்மனதினுள்ளேயும் இருந்து, உலாகின்து - வியாபிக்கின்றது.

யதி ஜீவிதுமிச்சஸி" என்ற தாய் வாய்ச் சொல்லுங்கேளாதே, [1]"அராக்ஷஸமிமம் லோகம் கர்த்தாஸ்மி நிசிதைச்சரை: । ந சேச் சரணமப்யேஷி மாமுபாதாய மைதிலீம்" என்று பெருமாள் அருளிச் செய்துவிட்ட பரமஹிதமான பாசுரத்தையும் அநாதரித்து *அடைகோட்டைப் பட்டவளவிலும் பூசலுக்குப் புறப்படவிட்ட ஸஹாயபூதரான படை முதலிகள் எல்லாரையும் †படக் கொடுத்து, ‡தான் ஏறிப் பொருதவன்று [2]ரிபூணாமபி வத்ஸலரான பெருமாள் §சரச் செருக்கு வாட்டி 'நம்முடனே பொருதும்படி இளைப்பாறி நாளை வா' என்றுவிட, நாணாதே போய், மண்டோதரி முதலான ||பெண்கள் முகத்திலே விழித்து, தன்னிற் பெரிய தம்பியையும் மகனையும் படக்கொடுத்து, தான் [3]சாவேறாக வந்து ¶ப்ரதிஹதஸர்வாஸ்த்ரனை பின்பும் சினம் தீராதே [4]சேவகப்பிச்சு ஏறி நின்ற ராவணனை, $இனி தலையறுக்குமதொழிய வேறொரு பரிஹாரமில்லை' என்று திருவுள்ளம் பற்றி, ஒரு தலைவிழ வேறொரு தலை கிளைக்க முன்பு பண்ணின விருத்தவ்யாபாரமன்றிக்கே

---

[1] ரா. யு. 41. 66. [2] ரா. யு. 50. 56. [3] சாவேறு=பகையரசனைச் சூழ்ந்துகாக்கும் படைமீது ஒருமுகமாய்ப் பாய்ந்து ஊடறுத்துச் செல்லமுயன்று, அந்நிலையில் உயிர்துறத்தலையே விரதமாகக் கொண்ட வீரர்தொகுதி. [4] சேவகப்பிச்சு=வீரன் என்னும் இறுமாப்பு

*அடைகோட்டை=முற்றுகையிடப்பட்ட கோட்டை.

*அடைகோட்டடைப்பட்ட—க. †படைக்கொடுத்து—க. ‡தான் நேரில் பொருதவன்று—வ. §சௌர்யச்செருக்கு—வ. ||பெண்டுகள் முகத்திலே விழித்தி-க. ¶ப்ரதிஹதஸர்வாஸ்த்ரனுமான—க, $இனித்தான் இவனையழிக்குமதொழிய—வ.

ஒருக்காலே பத்துத் தலையும் *உதிரும்படியாக. (ஓட்டி ஓர் வெங்கணை உய்த்தவன்)- 'தானேபோய் ராவணன் தலை பத்தும் கைக் கொள்ளவேணும்' என்று சின முடைத்தாய் அஸிதீயமாய் இருப்பதொரு திருச்சரத்தை தகையாதே ஓடவிட்டு †இரைபோர்ந்த இலக்குப் பெறுகையாலே அத்திருச்சரத்தை உய்யப்பண்ணின வன். சரத்தினுடைய ஆஶுகாரித்வத்தாலும் ராவண னுடைய வெயடுத்தாலும் தலைபத்து உதிர்ந்த பின் னும், அவன் உடல் கட்டைப் பனைபோலே சிறிது போது இருந்து நிற்கும்படியாயிருந்தது. 'தலைபத்து உதிர ஓட்டி' என்றது முன்னில் பூசலிலே ராவண னைத் தலை சாய்த்து [1]"஗஛ாநுஜாநாமி" என்று துரத்தி விட்டபடியாய், 'ஓர் வெங்கணை உய்த்தவன்' என்றது பின்பு அவனுடைய வயாயடுமாக அஸிதீயமான அஸ் த்ரத்தை விட்டவன் என்னவுமாம்.

(ஓதவண்ணன்) கண்டவர்களுடைய பாபத்தை யும் தாபத்தையும் ‡கழிக்கவற்றும் ஸமுத்ரம்போலே ஶ்யாமளமான திருமேனியை உடையவன். (மதுர மா வண்டு பாட மாமயிலாடரங்கத்தம்மான்)—ராவணவதம் பண்ணின வீரலக்ஷ்மியுடனே நின்ற அழகைக் கண்டு ஸூராதிகள் ஸ்தோத்ரம் பண்ண, அப்ஸரஸ்ஸுக்கள் ஜ்ருத்தம் பண்ணினாற்போலே [2]"ஆதாந ஶாநுஷம் ஶிநூ" என்கிற பெருமாளுடைய

---

[1] ரா. யு. [2] ரா. யு. 120. 10. *திரும்படியாக—க †இரைபொருந்த விளக்குபெருகையாலே—க. இல்லுக்கு—ஙு. ‡கழிக்கவைற்றும்-க.

[1]பூமிகைக்கு அநுரூபமாக முக்தரும் [2]நித்யரும் ஸஞ்சாரம் கொண்டு வந்தார்கள் என்னலாம்படி ஸத்வஸாரங்களாய் [3]ஜ்ஞாநாதிகுணவத்தையுமுடையவையான வண்டுகள் [4]காலப்பண்கள் பாட, பாட்டுக்கு அநுரூபமாக ஸாத்விகங்களான நீலகண்டங்கள் ந்ருத்தம் பண்ண, இங்கிதந்ருத்தங்களாலே [5]ஸஜ்ஜநோத்தரமான கோயிலாழ்வாருக்குள்ளே ஸஸுகமாய் வர்த்தியானபடி தோற்றக் [6]கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய. (திருவயிற்று உதரபந்தம் என் உள்ளத்துள் நின்று உலாகின்றதே) *"ஸாரஸாரம் ஸமுத்ருதம்" என்கிறபடியே ஸமுத்ருதர்க்கு மோக்ஷ ஹேதுவான ஸார ஸாரஸ்வத்தை வெளியிடா நின்ற திருவயிற்றில் 'திருவுதரபந்தம்' என்று திருநாமத்தையுடைத்தான திருவாபரணம் அதிக்ஷுத்ரனை என்னுடைய ஸதாமலதூஷிதமான ஹ்ருதயத்திலுள்ளே அதுவே நிவாஸஸ்தலி என்னும்படி நின்று அள்வற்ற ஸௌந்தர்ய [7]ப்ரகாசந வ்யாபாரங்களைப் பண்ணா நின்றது. [8]இது திருமந்திரத்திலும் திருமேனியிலும் மத்யத்திலே வரும் அநுபவம். 4.

மேல் இரண்டு [9]பாட்டால் நாராயணஸ்வரூபமுள்ளீடாக பெரியபிராட்டியாருடைய [10]நிவாஸத்தால்

---

* [1]ரூபத்தை ரமிக்கைக்கு—வ, [2]நித்யரும் கூடிவந்தார்கள். [3]ஞாநாதிகுணவத்தையையுடைய—வ. [4]காலமணங்கள்—க. [5]லோகோத்தரமான—வ. [6]கண்வளருகிற—க. [7]ப்ரகாசவ்யாபாரங்களை—க [8]இது திருமேனியிலும் மத்யத்திலே வரும்—க, [9]பாட்டில்—க [10]நிவாஸத்தாலும் நிகரில்லாத திருமார்வையும். [அநுபவிக்கிறார்—க.

[1]பூமிகை = மாறுவேஷம்.

நிகரில்லாத திருமார்வையும் திருக்கழுத்தையும் அனு பவிக்கிறார்:

பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத் தன்
வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி என்னுள்புகுந்
கோரமாதவம் செய்தனன் கொல் [தான்
அறியேன் அரங்கத்தம்மான் திரு
வார மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே. 5.

(பாரமாய பழவினை பற்றறுத்து)- *காலதத்வமுள்ளதனையும் ப்ராயஶ்சித்தம் பண்ணினாலும் கழிக்கவொண்ணாதபடி [1]உபசிதமாய்க்கொண்டு, அநாதிகாலம் நடக்கிற ஸாம்ஸாரிக ஸம்பந்தத்தை ஸவாஸநமாக என்னுடன் துவக்கறுத்து; (என்னைத் தன் வாரமாக்கி வைத்தான்)— இப்படி ஸம்பந்தமாய், இந்த்ரியகிங்கரனாய், தாஸரான ஜந்துக்களை எடுத்துச் சுமந்து [2]தனிசு தீராதே பொலிசை இறுத்துத் திரிகிற என்னை ஸவஸதவாவாய், †ஸ்வாமிகார்யத்திற்கு எல்லை

[1] உபசிதமாய்=சேர்க்கப்பட்டதாய்க்கொண்டு.
[2] தனிசு=கடன்; பொலிசை இறுத்தல்=வட்டிசெலுத்துதல்.

பாரமாய - மிகவும் பாரமாய், பழவினை - அநாதிகாலமாய் ஸம் பாதிக்கப்பட்ட பாபங்களை, பற்று அறுத்து - வேரோடு போக்கி, என்னை, தன்வாரமாக்கி வைத்தான் - தன்னிடத்திலே அன்புடைய வனாய்ச் செய்தான். வைத்ததன்றி - இப்படி வைத்ததற்கு மேல், என்னுள் புகுந்தான் - என் மனதில் வந்து புகுந்து கொண்டான்; (இப்படி என்னைப் பெறுகைக்கு) கோரமாதவம் - கடுமையான பெரிய தபஸ், செய்தனன்கொல் - செய்தானோ, அறியேன். அரங்கத்து அம்மான் - ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுகிற ஸர்வஸ்வாமியானவனுடைய, திருவாரமார்பதன்றோ-பிராட்டியையும், ஹாரத்தையுமுடைய திருமார்பன்றோ, அடியேனை, ஆட்கொண்டது - அடிமை கொண்டது. *காலமுள்ளதனையும்—க. †ஸ்வாமிகார்யத்திற்கு-வ.

நிலமாய், *ஸர்வபோக்யனை தன்னுடைய அந்த:புர ஸ்த்ரீகளைப் போலே அந்யர்க்குக் கூறு இல்லாதபடி பண்ணி, அஸாதாரண ஸௌந்தர்யரஸத்தைத் தந்து மேல்ஒருக்காலத்திலும் மாறாதபடி வைத்தான்.

(வைத்ததன்றி என்னுள் புகுந்தான்)-அநந்யனாக்கி வைத்தவளவன்றிக்கே, முன்பு ப்ரயோஜநாந்தரப்ரவணனை என்னுடைய ஹ்ருதயத்திலே அநந்யப்ரயோஜநாநுபவவிஷயமாய்க்கொண்டு, [1]தஸ்யுபரிக்ருஹீதமான தன் படைவீட்டிலே தஸ்யுக்களை ஓட்டிப் புகுருமாப் போலே புகுந்தான். (கோரமாதவம் செய்தனன் கொல் அறியேன்)— அநாதிகாலம் இழந்த வஸ்துவைப் பெறுகைக்கு அஸ்மதாதிகளை ஈஶ்வரன் தானே அவதாரக்ஷேத்ரமான திருவயோத்யையையும் விட்டு, ஆஶ்ரிதன் இருப்பிடமான லங்கையிலும் போகாதே, [2]'கங்கையில் புனிதமான காவிரி' நடுவுபாட்டிலே அதிகோரமாய் அதிமஹத்தாயிருப்பதொரு தபஸ்ஸைப் பண்ணினானோ அறிகிலேன். இது அதிவாதமாக உத்ப்ரேக்ஷித்தபடி. ஸர்வஸம்ஸாரநிவர்த்தகமாய் †அமோகமாயிருப்பதொரு 'மோக்ஷயிஷ்யாமி' என்கிற ஸங்கல்பரூபமான தபஸ்ஸைப் ‡பண்ணினான் என்று தாத்பர்யம். அங்ஙனன்றிக்கே இப்பெரிய பேறு பெறுகைக்கு அயோக்யனை நான் இதற்கு அநுரூபமாய் அமோகமாய் இருப்பதொரு மஹாதபஸ்ஸைப் பண்ணிப்

---

[1] தஸ்யு=திருடர். படைவீடு=ராஜதானி. [2] திருமாலை 23.

*ஸாந்த்ரபோக்யனை—வ

†ஆமோக்ஷமாயிருப்பது—ம. ‡பண்ணினானோ என்று—வ.

பெற்றேனல்லேன். இதற்கு [1]“க்ஷமி நிஹிதஸமஸ்த ஸோஸ்மி யத:” என்றும், [2]“தவ ஸமஸ்தஹாநிஷ்யாமி பூர்வகே:” *என்றும் சொல்லுகிறவிதொழிய. இப்போது நானும் பிறரும் அறியலாவது எனக்கு ஒரு த்ரவ்யம் காண்கிறிலேன் என்று ஈஸ்வரனுடைய இரக்கத்தின் ஸ்வரூபத்திலே தாத்பர்யமாகவுமாம்.

இப்படி க்ஷேத்ரஜ்ஞனை என்திறத்தில் இரங்கினவன் தான் தேறவொண்ணாத திருவில்லாத் தேவரில் ஒருவனல்லன்; [3]“அகலகில்லேன் இறையும் என்று அலர் மேல்மங்கை உறைமார்பன்” என்னுமிடத்தையும், ஸர்வஜ்ஞனை தமக்கு ஸ்ரீரானே கௌஸ்துபத்திலம் வாஸி என்னுமிடத்தையும், திறம்பாத சிந்தைக்கு சிக்கெனக் காட்டிக் கொடுக்கிறார்: (அரங்கத்தம்மான் திருவாரமார்பதன்றே அடியேனை ஆட்கொண்டதே). ஸர்வருக்கும் அனுபவிக்கலாம்படி ஸவபூஷணம் வாய்க்கொண்டு †கோயிலாழ்வாருக்குள்ளே கண்வளர்ந் தருளுகிற ஸௌலப்யகாஷ்டையோடுவிரோதியாத ஸ்வாமிக்வகாஷ்டையையுடையரான பெரிய பெருமாளுடைய ஸர்வாதிக்கு லக்ஷணமான திருவையும், அழகுவெள்ளத்திற்கு அணைகோலினாற்போலே இருக்கிற ஹாரத்தையும் உடைத்தான திருமார்வன்றே ‡ஸ்வாமிகஸௌஷகவாஸ ஸ்வாமிகளாய், அதற்கு மேலே

[1] வை. ஸ். 91. [2] ஸ்ரீரங்க. ஸ்த 102. [3] 6. 10, 10.

*என்றும் சொல்லுகிறபடியே—க. என்னுமிதொழிய—அ.

†கோயிலாழ்வார்க்குள்ளே ஸௌலப்ய—க. ‡ஸ்வாமிகஸௌஷி கவாஸஸ்வ—க.

[1]'ஸாநௌசாஸ்யாம்யஹம்' ஏனுமான என்னை ஸ்வஸ்வரூபாநுரூபமான ஸ்தோத்ராதிசேஷவ்ருத்தியிலே மூட்டி, அதற்கு இலக்காய் நின்றது.

இப்பாட்டில் பதங்களினடைவே நாராயணசப்தத்தில் விவக்ஷிதமான அநிஷ்டநிவர்த்தகத்வமும், இஷ்டப்ராபகத்வமும், உள்ளும்புறம்பும் வ்யாபித்து நிற்கும்படியும், நித்யஸ்ரீயையும், உபாயத்திற்குப் ப்ரதானமான வாத்ஸல்யமும், ப்ராப்யத்துக்குப் ப்ரதானமான ஸ்வாமித்வமும், ஸர்வப்ரதானமான ஸ்ரீயஃபதித்வமும், ஸம்ச்லேஷணாஸ்வாதநங்களாக ஸாதநங்களை யசிக்கிற ஸௌலப்யமான விக்ரஹயோகமும், *நாரசப்தவாச்யமான ஆத்மஸத்தின் ஸ்வரூபமும், ஆத்மஸத்தைமாகப் ப்ராப்திக்கப்படும் கைங்கர்யமும் அநுஸந்தேயம். 5.

“துண்டவெண்பிறையன்” அவதாரிகை. கீழ்ப்பாட்டில் மோக்ஷப்ரதானான தம்முடைய கைங்கர்யவிரோதிகளான நிருபாதிகஸாத்விகஸாதநங்களை யெல்லாம் நிராகரித்தபடியை அருளிச்செய்தார். இப்பாட்டில் மோக்ஷப்ரதர்களானவருடைய மோக்ஷவிரோதியான ஸிக்ஷாதேவமையைக் கழிக்கும்படியை உதாஹரிக்கிறார்.

துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் அஞ்சிறைய
வண்டுவாழ்பொழில் சூழ்
அரங்கநகர் மேயவப்பன்

---

[1]ரா. கி. 4.12.     *நாரசப்தார்த்தமான—க.



அண்டரண்ட பகிரண்டத்தொரு
மாநிலம் எழுமால்வரை முற்றும் [டதே. 6·
உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக்கொண்

(துண்டவெண்பிறையன் துயர் தீர்த்தவன்)— *ஈஶ்வரன் என்னும் பேரைச் சுமந்த தனக்கும் பூர்ணத்வமும் இல்லை என்கைக்கு ஜ்ஞாபகம் போலே பஞ்சமமாய்க் கொண்டு ப்ரகாசிக்கிற வக்த்ரத்தைச் சேதிக்கிற ருத்ரன் ப்ரஹ்மாவினுடைய புத்ரனாய் வைத்து, பிதாவின் திறத்திலே அபராதம்பண்ணி, அத்தாலே †மஹாபாதகாக்ராந்தனாய், 'இப்பாதகத்தைத்தீர்க்கவல்லாரார்' என்று கபாலஹஸ்தனாய்க்

---

*ஈச்வரன் என்று பேரைச்சுமந்ததனக்கு பூர்ணத்வமில்லை—க.
†மஹாபாதகனாய்—வ.

துண்ட - கலாமாத்ரமாய், வெண் - வெளுப்பாய் ப்ரகாசிக்கிற பிறையன் - சந்திரகலையையுடைய ருத்ரனின், துயர்தீர்த்தவன் - (கையில் கபாலத்தோடு இருக்க வேண்டும்படியான சாபத்தினாலுண்டான) துக்கத்தைத் தீர்த்தவனும், அம்-அழகிய, சிறைய-சிறகுகளை உடைய, வண்டுவாழ் - வண்டுகள் வாழும், பொழில் சூழ் - சோலைகள் சூழ்ந்த, அரங்கநகர்மேய - ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுகிற அப்பன் - ஸர்வலோகபிதாவுமான பெரியபெருமாளுடைய, அண்டர் - ப்ரஹ்மாண்டத்திற்குள்ளே வஸிக்கும் ஸகலசேதனர்களையும், அண்டம் - எல்லா அண்டங்களையும், பகிரண்டம் - அண்டங்களுக்கு வெளிப்பட்ட அண்டாவரணங்களையும், ஒருமாநிலம் - ஒப்பற்று விசாலமான பூமியையும், எழுமால் வரை - எழுகுலபர்வதங்களையும், முற்றும் - ஒன்று விடாதபடி, உண்ட - அமுதுசெய்த, கண்டம் கண்டீர் - திருக்கழுத்தன்றோ, அடியேனை உய்யக்கொண்டது - (தன் ஸ்வரூபத்தை உணர்ந்த) என்னை உஜ்ஜீவிக்கும்படி செய்தது.

கொண்டு *திரிந்து, ஓரளவிலே கெடுமரக்கலம் கரை சேர்ந்தாற்போலே காருணிகனான †ஸர்வேஶ்வரனை வந்து கிட்டி, [1]"என்னெந்தாய் சாபம் தீர்" என்ன, இவனுடைய சாபத்தைத் தீர்க்கவல்லவன். இத்தால் 'ஈஶ்வரன் என்று பேருடைய ருத்ரன் கர்மவஶ்யன்' என்னுமிடமும், தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்ள மாட்டாத இவன் வேறொருத்தருக்கு நிரபேக்ஷரக்ஷகனாகமாட்டான்' என்னுமிடமும், 'ஸர்வேஶ்வரனே ஸர்வாநிஷ்டநிவர்த்தகன்' என்னுமிடமும் சொல்லிற்றாயிற்று.

(அஞ்சிறைய வண்டு வாழ் பொழில் சூழ் அரங்க நகர் மேய அப்பன்)— ஆர்த்தியுடையார் அபேக்ஷித்தால் அவர்களுக்கு இஷ்டதாநமும் பண்ணுகைக்கும், [2]"மாசின் மலரடிக்கீழ்" அவர்களைச் சேர்க்கைக்கும் ஹேதுவான பக்திக்கு ஸாதநங்களாய், ஜ்ஞாநவைராக்யங்களான சிறகுகளையுடைத்தான வண்டுகள் ஸஹிதஹர்ஷத்தோடே வாழ்கிற உத்யாநங்களாலே சூழப்பட்ட ஸ்ரீரங்கநகரத்திலே நித்யவாஸம் பண்ணுகிற ஸர்வலோகபிதாவானவன். இத்தால் காரணபூதனாய், கரணகளேபரங்களைக் கொடுத்து உபகரித்தவன் கண்ணுக்கிலக்காய் வந்து கண்வளர்ந்து, கரணங்கள் பட்டி புகுராதபடி காக்கிற உபகாராதிஶயத்தை ‡உதாஹரித்ததாகிறது. [3]"நராஜ்ஞாதாநி தஸ்வாநி" இத்யாதிகளின் அர்த்தமும் இங்கே அநுஸந்தேயம்.

---

[1] தி. மொ. 1. 5. 8. [2] தி. வி. 54. [3] நாரத. கல். 1. 34.

*திரிந்தோரளவிலே-க. திரிந்ததோரளவிலே-வ. †ஸர்வேச்வரனைக் கண்டு என்னெந்தாயென் சாபம்—க. ‡உதாஹரிக்கிறதாகிறது-க.

காரணாவஸ்தையில் 'எல்லாக் கார்யங்களையும் தன்பக்கலிலே உபஸம்ஹரித்து, பின்பு *ஸ்ருஷ்டிக்கும்படிக்கு உதாஹரணமாக [1]"வெற்றிப் போர்க்கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக்கொண்ட" உபகாரத்தைக் காட்டி, [1]"நெற்றிமேல் கண்ணனும் நான்முகனும்' முதலாக [1]"எம்பெருமான் உண்டு உமிழ்ந்த எச்சில் தேவரல்லாதார் தாம் உளரே" என்னும் அர்த்தத்தைப் பேசிக்கொண்டு, தம்மை இப்போதும் ஸம்ஸாரார்ணவம் விழுங்காதபடி உய்யக்கொண்டபடியை உபபாதிக்கிறார்: (அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலம் எழுமால்வரை முற்றும் உண்ட கண்டம் கண்டர் அடியேனை உய்யக்கொண்டதே). அண்டாந்தர்வர்த்திகளான தேவாதிவஸ்துக்களையும், அண்டங்கள் தன்னையும், அண்டாவரணங்களையும், அண்டங்களுக்குள்ளே பஞ்சாஶத்கோடிவிஸ்தீர்ணமான மஹாப்ருதிவியாலும் ஸமுத்ரபர்வதங்களாலும் உபலக்ஷிதங்களான ஸர்வகார்யங்களையும் எல்லாம் திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்கைக்காக விழுங்கின திருக்கழுத்துக் கண்டர் ஸ்வரூபத்தை †உணர்ந்த என்னை ஸ்வாநுபவத்தாலே உஜ்ஜீவிப்பித்தது. அண்டாதிகளைப் பற்றச் சிறியவான ஸமுத்ரபர்வதாதிகளைப் பிரியப் பேசுகையாலே, அவ்வளவு விழுங்குகையும் ‡ஆஶ்சர்யம் அன்று என்று தோன்றுகிறது. 6.

---

[1] தி. மொ. 11. 6. 3, 2. *ஸ்ருஷ்டிக்கும்படி உதாஹரண—க.
2 நெற்றிமேல் கண்ணனவன் முதலாக நான்முகனும்.—க.
†உணர்த்த என்னை ஸ்வாநுபவத்தாலே உஜ்ஜீவிப்பித்து, அண்டாதிகளைப் பற்றி சிறியவன் குலபர்வதாதிகளை—க.
‡ஆச்சர்யம் என்று தோன்றுகிறது—க.

மேல் *நாலுபாட்டாலே வதாவதியில் ப்ரார்த்தநீயமான கைங்கர்யத்திற்குப் †ப்ரஸ்தாவகமான அநுபவம் தம்மை இப்போது பரவசமாக்கினபடியைப் பேசுகிறார். ‡அதில் 'கையினார்' என்கிற பாட்டில் ஆழ்வார்களோடு $பொருந்தின திருக்கையை ஸ்வாலம்பநமாகக் கொண்டு ¶திருமுடியளவும் சென்று மீண்டசிந்தையை [1]தூமுறுவல் தொண்டைவாய்ப்பிரானுடைய "கோலந்திரள் பவளக்கொழுந்துண்டம் கொல்" என்னும்படியான திருப்பவளத்தில் அழகு தன் வசமாக்கிற்று என்கிறார்.

கையினார் சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் துளபவிரையார்கமழ் நீண்முடி எம் [னார்
ஐயனார் அணியரங்கனார் அரவினணைமிசைமேயமாய
செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே. 7.

(கையின் ஆர் சுரிசங்கு அனல் ஆழியர்)— திருக்கைக்கு ஆயுதமாகைக்கும் ஆபரணமாகைக்கும் போரும் என்னும்படி ஆர்ந்த ஸந்நிவேஶத்தை யுடைத்தாய், ‖வலம்புரியான வடிவாலே ப்ரணவஸந்நிவேஶமாய், ஸ்ப்ருஹணீயமாய், நிரதிஶயாநந்தஹேதுவான

[1]7. 7. 3. *நாலுபாட்டாலே ப்ரார்த்தநீயமான—க. †ப்ரஸாயகமான—க; ப்ரதாநமான அநுபவம் தம்மைப்பரவசமாக்கின—வ. ‡'அதில் கையினார்..........என்கிறார்': இது பாசுரத்திற்குப் பிறகு அச்சிடப்பட்டிருக்கிறது—க. §பொருந்தும்—க. $திருமுடியளவுசென்று—க. ¶அவ்வலம்புரியான—க.

கையின் - திருக்கைகளிலே, ஆர் - அழகுநிறைந்து, சுரி- வலம்புரியாயிருக்கும், சங்கு - பாஞ்சஜந்யத்தையும், அனல் ஆழியர்- (சத்ருக்கள் மீது) அக்னியைக் கக்கும் சக்ரத்தையும் ஏந்தின

ஸ்ரீவாம்ஸஜந்த்தையும், ஆநவதிவார்ஷியாய், *மநஸ்தத்வாபி மாநியான திருவாழியாழ்வானையும் உடையராய்; இத்தால் 1மந்த்ரத்தையும் மநஸ்ஸையும் அநுகூலசிந்தைக்கு அநுகுணமாக்கவல்ல உபகரணங்களை †யுடையவர் என்றதாயிற்று. இவ்வாயுதாழ்வார்கள் 2பெரியபெருமாளுடைய திருக்கைமலர்களில் ஒதுங்கிக்கிடந்து, 2பெருமாள் திருமேனியிலே தோன்றிநிற்பர்கள். (நீள்வரைபோல் மெய்யனார்)— ஸ்வரூபம்போலே ஸூக்ஷ்ம த்ருஷ்டிகள் காணுமளவன்றிக்கே, மாம்ஸசக்ஷுஸ்ஸுக்களும் காணலாம்படி ‡மலை இலக்கான திருமேனியை

*மநஸ்ஸத்வாபிமாநியான திருவாழியாழ்வானையுடையராய்—க.
†உடையார்—க. ‡மலையிற்காண—வ.

1சப்தப்ரஹ்மமயமான பாஞ்சஜந்யம் மந்திரத்தையும், மனஸ்தத்வாபிமானியான சக்ரம் மனஸ்ஸையும் அநுகூலமாக்கும் என்று கருத்து.

2'பெரியபெருமாள்' என்று ஸ்ரீரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கும் மூலவருக்கும், 'பெருமாள்' அல்லது 'நம்பெருமாள்' என்று உத்ஸவருக்கும் திருநாமங்களாக வழங்கிவருகின்றன.

வரும், நீள்வரைபோல்-உயர்ந்தமலைபோன்ற, மெய்யினர் - திருமேனியையுடையவரும், துளப-திருத்துழாயினுடைய, விரை-வாஸனை, ஆர் - பூர்ணமாகும்படியாக, கமழ் - வாஸனைகமழ்கின்ற, நீள்முடி - உயர்ந்த கிரீடத்தையுடைய, எம்ஐயனார் - ஸர்வலோகபிதாவானவரும், அணி அரங்கனர் - (இரண்டுவிபூதிக்கும்) ஆபரணம் போன்ற ஸ்ரீரங்கவிமானத்தை சயனஸ்தானமாக உடையவரும், அரவின் அணைமிசைமேய - ஆதிசேஷனாகிற திருப்பள்ளியின்மேல் கண்வளர்ந்தருளுகிற, மாயனார் - ஆச்சர்யச் செய்கைகளை உடையவருமான பெரியபெருமாளுடைய, செய்யவாய் - சிவந்தவாயானது, என்னைச் சிந்தை கவர்ந்ததுவே - என் சிந்தையைப் பறித்துக்கொண்டது. ஐயோ - ஆச்சரியம்-

